

# அம்ருதா

## Amrudha Tamil Monthly


Volume 16 Issue 04 November 2021 Rs.25
ஆண்டு 16 இதழ் 04 நவம்பர் 2021 ரூ. 25


- வைதேகி
- தி.இரா. மீனா
- டி. கண்ணன்
- நிலாந்தன்
- ஜெகநாத் நடராஜன்
- இளங்கோ
- ஆலிஸ் மன்றோ
- ஸிந்துஜா
- ராமச்சந்திர குகா
- மணி வேலுப்பிள்ளை
- எம். ரிஷான் ஷெரீப்
- சுப்ரபாரதிமணியன்
- ஷங்கர்ராமசுப்ரமணியன்
- ழாக் ப்ரெவர்
- கருணாகரன்
- நடேசன்
- விட்டல்ராவ்

# ஆணுக்கும் பெண்ணுக்கும் வித்தியாசங்கள் இருந்தாலும் மனதளவில் இருவரும் ஒன்றுதான்!

ஜேவியர் மரியாஸ் நேர்காணல்

ஆண்டு 16 இதழ் 4



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

நவம்பர்-2021 விலை ரூ. 25

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**

ஆலோசனைக் குழு
ஓவியம்: **சந்ரு**
மனநலம்: **டாக்டர் மா. திருநாவுக்கரசு**
வரலாறு: **பொ. வேல்சாமி**
மொழிபெயர்ப்பு: **நாகரத்தினம் கிருஷ்ணா**
திரைப்படம்: **விட்டல்ராவ்**
கல்வி: **பேரா. தியாகராஜன்**
அறிவியல்: **பத்ரி சேஷாத்ரி**
இலக்கியம்: **தேவேந்திரபூபதி**
நாடகம்: **அ. ராமசாமி**
ஊடகம்: **இளைய அப்துல்லாஹ்**
சூழலியல்: **மோகன்ராம்**
இசை: **ரவிசுப்பிரமணியன்**
விளையாட்டு: **ஆர். அபிலாஷ்**
தற்கால நிகழ்வுகள்: **செ. சண்முகசுந்தரம்**
அரசியல்: **மருதன்**

வடிவமைப்பு: **பிரபாகரன்**

**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒமிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

# இந்த இதழில்...

04 ஆசிரியர் பக்கம்
**பிரபு திலக்**

06 சிறுகதை
**வைதேகி**

13 கவிதை
**டி. கண்ணன்**

14 அரசியலாகிய ஒரு பாடகி!
**நிலாந்தன்**

17 நினைவுகளும் கனவுகளும்
**பாவண்ணன்**

20 நேர்காணல்
**ஜேவியேர் மரியாஸ்**

26 சிறுகதை
**இளங்கோ**

38 நோபலை திரும்பிப் பார்க்க வைத்த ஆளுமை
**ஸிந்துஜா**

42 தென்னிந்தியா ஒருபடி மேல்
**ராமச்சந்திர குகா**

45 கவிதை
**எம். ரிஷான் ஷெரீப்**

46 சிறுகதை
**சுப்ரபாரதிமணியன்**

50 நான் பிறந்த க-வி-தை
**ஷங்கர்ராமசுப்ரமணியன்**

54 கவிதை
**கருணாகரன்**

62 காமமும் அதன் மீறல்களும்
**நடேசன்**

64 தொலைப்பேசி நாட்கள்
**விட்டல்ராவ்**

# தனி ஒரு மனிதனுக்கு உணவில்லை எனில்..

பிரபு திலக்

'உலகளாவிய பசி குறியீடு' தொடர்பாகச் சென்ற மாதம் வெளியான அறிக்கையில் 116 நாடுகளில் இந்தியா 101வது இடத்தில் இடம்பெற்றிருந்து சர்ச்சைக்குள்ளானது. நாடுகளில் நிலவும் பட்டினியைப் பொறுத்தவரைக்கும் 15 நாடுகள் மட்டுமே இந்தியாவைவிட மோசமான நிலையில் உள்ளதாக இந்த அறிக்கை தெரிவிக்கிறது. இந்த பட்டியலில் நமது அண்டை நாடான சீனா 5ஆவது இடத்திலும் இலங்கை 65வது இடத்திலும் பர்மா 71வது இடத்திலும் நேபாளம் 76ஆவது இடத்திலும் பாகிஸ்தான் 92ஆவது இடத்திலும் உள்ளன. இந்தியாவின் நிலை இந்த நாடுகளை மட்டுமல்ல, பல ஏழை ஆப்பிரிக்க நாடுகளைவிடவும் மோசமான இடத்தில் உள்ளதை இந்த பட்டியல் வெளிப்படுத்தியுள்ளது. அதாவது கோஸ்டாரிகா, சூரிநாம், கயானா, நிகராகுவா, கானா, எத்தியோப்பியா, பர்கின ஃபாஸோ, சூடான், ருவாண்டா போன்ற பின்தங்கிய ஆப்பிரிக்க, தென்னமெரிக்க நாடுகள்கூட மக்களின் பசியாற்றுவதில் இந்தியாவைவிட சிறப்பாகச் செயல்பட்டுள்ளன.

அயர்லாந்தைச் சேர்ந்த `கன்சர்ன் வேல்ர்ட்வைட்' அமைப்பும் ஜெர்மனியைச் சேர்ந்த `வெல்ட் ஹங்கர் ஹில்ஃப்' அமைப்பும் இணைந்து இந்த ஆய்வறிக்கையை வெளியிட்டுள்ளன. `குளோபல் ஹங்கர் இன்டெக்ஸ்' என்கிற தலைப்பில் ஆண்டுதோறும் உலக நாடுகளின் பட்டினி குறித்த அறிக்கையை இந்த அமைப்புகள் வெளியிட்டு வருகின்றன.தற்போது வெளியாகியுள்ளது 2021ஆம் ஆண்டுக்கான அறிக்கை.

பல்வேறு அளவீடுகள், புள்ளி விவரங்களின் அடிப்படையில் இந்த அறிக்கை தயாரிக்கப்பட்டுள்ளது. உலகம் முழுவதும் பட்டினியையும் அதனால் உருவாகக்கூடிய சமூகப் பிரச்சினைகளையும் எதிர்கொள்வதற்கு இந்தப் புள்ளிவிவரங்கள் உதவக்கூடும் என்ற நோக்கில் இவை கணக்கிடப்படுகின்றன. எப்படிக் கணக்கிடுவது என்பதற்கு சில அளவுகோல்கள் முன்வைக்கப்படுகின்றன. குறிப்பாக, ஒவ்வொரு நாட்டிலிருந்தும் நான்கு விஷயங்களுக்கான தரவுகள் சேமிக்கப்படுகின்றன. முதலாவதாக, போதுமான சத்துணவு இல்லாத மக்களின் சதவீதம்; இரண்டாவது, ஐந்து வயதுக்குட்பட்ட குழந்தைகள், தங்கள் உயரத்திற்கு ஏற்றஎடையில்லாமல்இருத்தல்; மூன்றாவது, குழந்தைகள் தங்கள் வயதிற்கேற்ற உயரமின்றி குன்றிப் போயிருத்தல்; நான்காவது, ஐந்து வயதுக்குட்பட்ட குழந்தைகளின் இறப்பு விகிதம். இந்த நான்கு காரணிகளைக் கொண்டு இந்த அறிக்கை தயாரிக்கப்படுகிறது.

இதன் அடிப்படையில் ஒவ்வொரு நாட்டிற்கும் மதிப்பெண்கள் வழங்கப்படுகின்றன. இதில் 10க்கும் குறைவான மதிப்பெண்களைப் பெற்றவை 'கீழ்' என்ற பிரிவில் பட்டியலிடப்படுகின்றன. 10 முதல் 20 வரையிலான மதிப்பெண்களைப் பெற்றவை 'சுமார்' என்ற பிரிவில் வைக்கப்படுகின்றன. 20 முதல் 35 வரையிலான மதிப்பெண்களைப் பெற்றவை 'தீவிரமான' என்ற பிரிவிலும் 35 முதல் 50 வரையிலான மதிப்பெண்களைப் பெற்றவை 'ஆபத்தான' என்ற பிரிவிலும் 50க்கு மேற்பட்ட மதிப்பெண்களைப் பெற்றவை 'தீவிர ஆபத்தான' என்ற பிரிவிலும் வைக்கப்படுகின்றன.

இந்தியா 27.5 மதிப்பெண்களுடன் பசி தீவிரமான நாடுகளில் ஒன்றாக உள்ளது.

முன்னதாக, 2016ஆம் ஆண்டு வெளியான புள்ளிவிவரங்களிலேயே, உலகில் வளர்ச்சிக் குறைபாடான குழந்தைகளின் எண்ணிக்கையில் மூன்றில் ஒரு பங்கினர் இந்தியாவில்தான் இருந்தனர்.

2017இல், "இந்தியாவில் 5 வயதுக்கும் குறைவான 10 லட்சத்து 4 ஆயிரம் குழந்தைகள் இறந்துள்ளன. இதில், 68.2 சதவிகித குழந்தைகள் ஊட்டச்சத்துக் குறைபாட்டால் இறந்துள்ளன" என்று, 'டான்செட் சைல்ட் அண்ட் அடோலசன்ட் ஹெல்த்' என்ற இதழில் வெளியான ஆய்வறிக்கையில் கூறப்பட்டிருந்து.

சென்ற ஆண்டுகூட, 2020 ஏப்ரல் 17 அன்று இந்தியன் எக்ஸ்பிரஸ் நாளிதழில் அமர்த்தியா சென், அபிஜித் பானர்ஜி, ரகுராம் ராஜன் மூவரும் இணைந்து எழுதிய கட்டுரையில், "இந்தியாவில் பெரும் மக்கள் கூட்டம் ஏழ்மைக்கும் பட்டினிக்கும் தள்ளப்படும். அவர்களை நாம் காப்பற்ற வேண்டும்" என்று எச்சரித்திருந்தார்கள்.

அக்கட்டுரையில் மேலும், "இப்போதைய கவலை, இதுவரையிலும் இருந்த கவலைகளையெல்லாம் விடப்



பெரிய கவலை எதுவெனில் பெரும் எண்ணிக்கை யிலான மக்கள் கடுமையான ஏழ்மைக்கோ அல்லது பட்டினிக்கோ தள்ளப்படலாம். கொரோனா பொது முடக்கத்தால் அவர்களின் வாழ்வாதாரம் பாதிக்கப்பட்டிருப்பதாலும் வழக்கமாக அவர்களுக்கு வழங்கப்படும் உதவிகளுக்கான அரசு வழிமுறைகள் தடைப்பட்டிருப்பதாலும் இது நடப்பதற்கு வாய்ப்பு உள்ளது. இது மிகக் கொடூரமானதாகும்.

மிகமுக்கியமாக ஏழைகளில் மிகக் கணிசமான பகுதியினர் பொதுவிநியோக பட்டியலிலிருந்து விலக்கி வைக்கப்பட்டிருக்கிறார்கள்.ஏதோ ஒரு காரணத்திற்காக இது நடந்திருக்கிறது. உதாரணமாக, மிகச்சிறிய மாநிலமான ஜார்கண்டில்கூட 7 லட்சம் குடும்ப அட்டைகளுக்கான விண்ணப்பங்கள் நிலுவையில் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. முதியோர் உதவித் தொகைக்கான விண்ணப்பங்கள் எல்லாம் சரிபார்த்தல் நடைமுறைக்காகக் காத்துக் கிடக்கின்றன. இந்த தாமதத்தில் நியாயங்கள் இருக்கலாம். ஆனால், ஒரு நெருக்கடி காலகட்டத்தில் இது அவசியமற்றது' என்று கூறியிருந்தனர்

கடந்த 2020 டிசம்பர் மாதத்தில் வெளியான 'தேசிய குடும்ப சுகாதார ஆய்வு' முடிவில்கூட இந்தியாவில் ஊட்டச்சத்துக் குறைபாடு இருப்பது குறித்துச் சொல்லப்பட்டிருந்தது. உலக பொருளாதார மன்றமும் `கோவிட்-19 தொற்றால் உலகம் முழுக்க பட்டினி, வறுமை அதிகரித்திருக்கிறது. குறிப்பாக இந்தியாவில் வெகுவாக அதிகரித்திருக்கிறது' என்று சொல்லியிருந்தது.

இந்த எச்சரிக்கைகள் எல்லாவற்றையும் நமது அரசுகள் அலட்சியப்படுத்தியுள்ளதையே தற்போது வெளியாகியுள்ள 'உலக பட்டினி பட்டியல்' அம்பலப்படுத்தியுள்ளது. 'தனி ஒரு மனிதனுக்கு உணவில்லை எனில் இந்த ஜகத்தினை அழித்திடுவோம்' என்றார் பாரதி. இங்கே பெரும் மக்கள் கூட்டமே உணவில்லாமல் உள்ளது ஆதாரங்களுடன் வெளியாகியுள்ளது.

இந்தியாவின் பிரச்சினை என்பது செல்வம்,சரியான முறையில் பங்கீடு செய்யப்படாததே என்பதையே இந்த அறிக்கையும் சுட்டிக்காட்டுகிறது. இந்திய மக்களில் 22 சதவீதம் பேர் வறுமைக்கோட்டிற்குக் கீழ் வாழும் நிலையில், உலகப் பெரும் கோடீசுவரர்களில் 84 பேர் இந்தியாவில்தான் வசிக்கிறார்கள் என்பதை இந்தப் பட்டியலுடன் சேர்ந்த அறிக்கை சுட்டிக்காட்டுவது குறிப்பிடத்தக்கது.

'2017 முதல் அடுத்த ஐந்து வருடங்களில், எடை குறைவான குழந்தைகள் பிறப்பை ஆண்டுக்கு 2 சதவிகிதமும்,போதிய வளர்ச்சி இல்லாமல் குழந்தைகள் இருப்பதை 25 சதவிகிதமும், பெண்கள் மற்றும் 5 வயதுக்குட்பட்ட குழந்தைகள் இரத்த சோகையால் பாதிக்கப்படுவதை ஆண்டுக்கு 3 சதவிகிதமும் குறைக்க' ஒன்றிய அரசு நிர்ணயித்த இலக்கு எட்டப்படவில்லை என்பதுடன் மேலும் மோசமாகியுள்ளது.

ஆனால், "இந்தப் பட்டியல் அறிவியல்பூர்வமாகவோ கள எதார்த்தத்தைக் கணக்கில் எடுத்துக்கொண்டோ தயாரிக்கப்படவில்லை" என்று ஒன்றிய அரசு மறுப்பு தெரிவித்துள்ளது. ஒன்றிய அரசின் பெண்கள் மற்றும் குழந்தைகள் நல மேம்பாட்டு அமைச்சகம், ``உலகளாவிய பட்டினி குறியீட்டுப் பட்டியல் எங்களுக்கு அதிர்ச்சியை ஏற்படுத்தியிருக்கிறது. இந்த அறிக்கையைத் தயாரிப்பதற்கு முன்பு சரியான ஆய்வுகள் மேற்கொள்ளவில்லை என்றே நினைக்கிறோம்" என்று எதிர்ப்பு தெரிவித்து அறிக்கை வெளியிட்டிருக்கிறது.

இந்தியாவுக்கு இந்தப் பட்டியலில் 101ஆவது இடம் என்று சொல்லப்பட்டிருப்பது தவறாகக்கூட இருக்கலாம். ஆனால், இந்தியாவில் பசி, பட்டினியால் வாடுபவர்கள் இருந்துகொண்டுதான் இருக்கிறார்கள் என்பது நாம் அன்றாடம் நேரில் காணும் உண்மைதான். ஆகையால்,இந்த அறிக்கைக்கு எதிர்வினையாற்றுவதை விட்டுவிட்டு, ஊட்டச்சத்துக் குறைபாட்டையும் பட்டினியையும் குறைப்பதற்கான நடவடிக்கைகளை அரசுகள் எடுக்க வேண்டும்.

இந்தியாவில் 5 பெண்களில் ஒருவர் எடை குறைவாக உள்ளார். எடை குறைவாகக் குழந்தைகள் பிறப்பதற்கும் குறைப் பிரசவத்துக்கும் இதுவும் காரணம். குழந்தைகளின் ஆரோக்கியத்தை அதிகரிக்க, தாய்மார்களுக்கு ஊட்டச்சத்தை அதிகரிக்கத் தேவையான நடவடிக்கைகளை எடுக்க வேண்டும்.

வரும் நாட்களில், அரசு தன்னிடம் உள்ள அனைத்து வாய்ப்புகளையும் பயன்படுத்தி ஒருவர்கூட பட்டினியாக இல்லை என்பதை உத்தரவாதப்படுத்த வேண்டும். பொதுவிநியோகத்தை விரிவுபடுத்த வேண்டும். தங்களது குடும்பங்களிலிருந்து தொலைதூரங்களில் வசிக்கும் புலம் பெயர்ந்த தொழிலாளர்களுக்கும் மற்றவர்களுக்கும் அரசு உணவகங்களை அமைக்க வேண்டும். சில மாநிலங்கள் ஏற்கெனவே செய்து கொண்டிருப்பது போலப் பள்ளிக் குழந்தைகளுக்கு, பள்ளிகளில் வழங்கப்படும் உணவுக்கு ஈடானவற்றை குழந்தைகளின் வீடுகளுக்கும் நேரடியாக அனுப்பி வைக்க வேண்டும்.

மிக உள்ளடங்கிய பகுதிகளில் வசிக்கும் எளிதில் பாதிக்கப்படக்கூடிய மக்களுக்கும் உணவுப் பாதுகாப்பை உறுதிசெய்ய வேண்டுமானால், சமூக ரீதியிலான, பொருளாதார ரீதியிலான, அரசியல் ரீதியிலான பாகுபாடுகளையும் அரசு சரிசெய்ய வேண்டும். ●

# கூண்டுக்குள் ஒரு பறவை

**வைதேகி**
**தமிழில்: தி.இரா. மீனா**
**ஓவியம்:** Heidi Hahn

அவன் கதவைப் பூட்டிக்கொண்டு புறப்பட்டான். சிறிது தூரம்போய்விட்டுத்திரும்பிப்பார்த்தான். மாலதி எல்லாக் கதவுகளையும்ஜன்னல்களையும் அதற்குள் மூடியிருந்தாள். புறப்படுவதற்கு முன்னால் கதவைப் பூட்டும்படி அவள் சொன்னபோது அவன் சிரித்தான். "நீ ஏன் ஓர் அடையாளச் சீட்டை ஒட்டக் கூடாது?என்னால் இன்னும் அதிகமாகச் சிரிக்கமுடியும்!" அவன் சொன்னான்.

"நான் நகைச்சுவைக்காகச் சொல்லவில்லை; உண்மையாகச் சொல்கிறேன்", என்றாள் அவள்.

"எதற்காக அப்படி?"

"வெளியிலிருந்து பூட்டி விடவேண்டும். நான் உள்ளே தனியாக இருக்க வேண்டுமென்பது என் ஆசை" என்று பதில் சொன்னாள் மாலதி.

"என்ன வினோதமான ஆசை இது? நான்சென்ஸ்!"

"நாம் செய்யும் எல்லாமும் ஏன் அறிவுடையதாக இருக்க வேண்டும்? அறிவற்ற ஆசைகளும்கூட சந்தோஷம் தர முடியுமல்லவா?"

அவன், அவளை உற்றுப்பார்த்தான்."சரி, நான் உன்னைப்பூட்டிவிட்டுபோகிறேன். ஆனால்,யாராவது வந்து விட்டால்?"

"யார் கதவைத் தட்டுவார்கள்? பூட்டியிருக்கும் கதவைப் பார்த்து விட்டுப் போய் விடுவார்கள்."

"உன்னை ஜன்னலின் வழியாக அவர்கள் பார்த்து விட்டால்?"

"ஓ! நீங்கள் போன உடனேயே நான் எல்லா ஜன்னல்களையும் அடைத்துவிடுவேன்."

"ஆனால், ஏன்?ஏன் இப்படிச் செய்ய விரும்புகிறாய்?"

"சும்மாதான். ஒரே மாதிரியாக இருந்து சலித்துவிட்டது."



"சலிப்பா? திடீரென ஒருநாள் ஒரே மாதிரியான மனிதனுடன் இருப்பது சலித்துப் போய்விட்டது என்றுகூட நீ சொல்லலாம்!" அவன் கண்களில் சிரிப்பு வழியச் சொன்னான்.

"இருக்கலாம்,அதில் ஏதாவது அதிசயமிருக்குமா?"

"என்னைப் போன்ற யாராவது ஒருவர்தான் உன்னுடன் வாழ முடியும்!" கண்ணாடியைப் பார்த்து தலையைச் சீவியபடி குறும்பாகச் சொன்னான்.

"ஓ, உண்மையாகவா? இதற்காகக் கடைசியில் உங்களுக்கு தங்கமெடல் வழங்கப்படும், கவலைப் படாதீர்கள்."

"அதற்கு முன்னாலே நீ இந்த உலகத்தை விட்டுப் போய்விட்டால்?"

"நான் போவதற்கு முன்னால் நீங்கள் போய்விட்டால்? "தலையைத் தூக்காமல் அவன் சட்டைப் பொத்தானைத் தைத்தபடி சொன்னாள்.

"ஓ,கடவுளே!காலம்எப்படிமாறிப்போய்விட்டது! ஒரு காலத்தில் தன் கணவனின் வாயிலிருந்து இப்படி அமங்கலமான வார்த்தைகள் வந்தால், மனைவி தன் விரல்களால் அவன் வாயைப் பொத்தி, கடவுளுக்கு முன்னால் நெய் விளக்கு ஏற்றிவைப்பாள்."

"காலம் முழுவதுமாக மாறிவிடவில்லை. இப்போதுகூட நான் நெய் விளக்கேற்றி நீங்கள் சொன்னதைச் செய்யலாம்."

"அப்படியானால் அதை மறந்துவிடலாம். எதற்கு நெய்க்காகச் செலவு செய்ய வேண்டும்? எவ்வளவு நாட்கள் நாம் சேர்ந்து வாழமுடியுமோ அவ்வளவு நாட்கள் வாழலாம்,சரியா?"

"ஓ!,ஆமாம், நாம் சந்தோஷமாக வாழலாம். ஏன் சாவைப் பற்றி இப்போது பேசவேண்டும்?"

"உம். சமர்த்துப் பெண். நான் புறப்படட்டுமா?" அவள் கன்னத்தை லேசாக நிமிண்டினான்.

"சரி, ஆனால், கதவைப் பூட்டுவதை மறக்கவேண்டாம்."

அவன் ஒரு கணம் யோசித்தான்.

"சரி, நான் பூட்டுகிறேன். ஆனால், ஒரு நிபந்தனை; நீ உள்ளே இருக்கிறாய் என்பது யாருக்கும் தெரியக்கூடாது. ஒரு சின்னச் சப்தம் கூட வரக்கூடாது. மனைவியை உள்ளே வைத்துப் பூட்டிவிட்டுப் போகும் கணவன் ரகம் என்று என்னை அக்கம்பக்கத்தவர்கள் நினைத்துவிட்டால்? நான் சொல்வது உனக்குப் புரியும்

என்று நினைக்கிறேன்.”

“ஓ, ஆமாம், எனக்குப் புரிகிறது. அதைப்பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். ஆனால், உங்களை எப்படி சமூகம் எச்சரிக்கையாக்குகிறது, பாருங்களேன்.”

“சமூகம் மட்டுமில்லை நானும்தான்! என் மீது யாரும் பழிபோடுவதை என்னால் பொறுத்துக் கொள்ளமுடியாது.” சொல்லிவிட்டு அவன் படி இறங்கினான்.

“கவனமாக இரு மாலதி!” மிக மெல்லிய குரலில் சொல்லியபடி கதவைப் பூட்டினான்.

“பூட்டு எப்படியும் பத்திரமாக இருக்கும்.” சொல்லியபடி மாலதி சிரித்தாள்.

“உன்னை என்னால் புரிந்து கொள்ளமுடிய வில்லை.” புறப்படுவதற்கு முன்பு சொன்னான்.

அவன் மாலை வரை திரும்பமாட்டான். கதவுகளையும்ஜன்னல்களையும் மூடிவிட்டு, திரைச்சீலைகளையும் அவள் இழுத்துவிட்டாள். மழை மூட்டம் போன்ற ஒரு தன்மை அறையைச் சூழ்ந்தது. அறைக்குள் பகல் நேரத்தில் வலிந்து ஏற்படுத்திய இருட்டு, மயக்கம் தருவதாக இருந்தது. கடைசியாக அவள் தனியாக இருக்கிறாள். யாரும் எட்டிக் கூடப் பார்க்கமுடியாது.

எப்படித் தைப்பது என்று கேட்டுக்கொண்டு, ஊசியோடு உரிமையாக, அடுப்படிக்குள் பக்கத்து வீட்டுப் பெண் ஹரீனாவால் வரமுடியாது.

அந்த மூதாட்டியின் வீட்டிலிருந்து சிறுமி கையில் டம்ளரோடு நின்று கொண்டு,“சர்க்கரை வாங்கி வரும்படி சொன்னார்கள்” என்று வர முடியாது.

இல்லை,ஒருவரும் உள்ளே வரமுடியாது. அவள் மிகமிகச் சுதந்திரமாக இருக்கிறாள். அவளுக்கு எப்படியிருக்க வேண்டுமோ அப்படியிருக்கலாம். ஏன் அப்படி இருக்கிறாய் என்று யாரும் கேட்கமுடியாது.

ஒவ்வொரு அறைக்குள்ளும் சென்று எட்டிப்பார்த்து வீட்டைச் சுற்றி வந்தாள். இப்போது அவள் என்ன செய்ய வேண்டும்? எதுவும் செய்யாமலிருக்கலாம், சமையல்கூட. டேப் ரிகார்டரை ஆன் செய்து ஒவ்வொரு பாடலையும் நிதானமாகக் கேட்கலாம். ஆனால், அவள் எப்படிப் பாடல்கள் கேட்கமுடியும்?அவள் அதைச் செய்யக் கூடாது! குளியல்? அதை முதலில் செய்கிறேன். அவள் அறைக்குள் சென்று கதவை மூடிக் கொண்டாள். ஆனால், ஏன் கதவை மூடவேண்டும்? யாரிடமிருந்து மறைக்க? அவள் ஏன் மூடினாள்? பழக்கதோஷம்தான். ஏன் பாதி திறந்து வைக்கக்கூடாது? கதவு திறந்தது. அவளுடைய தாய் திறந்த வெளியில் அவளைக் குளிப்பாட்டிய காட்சி கண் முன்பு விரிந்தது. திறந்த கதவுகள், ஆடையற்ற நாட்கள் பேரானந்தமானவை! அவை எப்போதாவது மீண்டு வருமா?

ஆடைகளின் அடுக்குகள் பெருகிய போது கதவுகளும் தாளிடப்பட்டன. சிறகுகள் போல் மென்மையாக இருந்த மனங்கள் படிப்படியாகக் குப்பைகளால் நிரம்பி, இனி பறக்கவோ அல்லது மிதக்கவோ முடியாது என்றாகிவிட்டன. மனிதர்கள் தங்களைத் தாங்களே சிறைப் படுத்திக்கொண்டனர்!ஒரு குதிரையைப் போல! இந்த நூற்றாண்டு மனிதர்களைவிட ஆதாமும் ஏவாளும் மிகப் புத்திசாலிகள். தடைகள் இல்லாதவர்கள்.

கொப்பரையில் சுடுதண்ணீர் கொதித்தது. அதைக் காலி செய்த போது அவளுக்கு முழு பலத்துடன் விசிலடிக்க வேண்டும் போலிருந்தது. ஓ என்று கத்தவேண்டும் போலிருந்தது. முழுவதுமாகக் கட்டுப்பாடின்றி இருப்பது எப்படியிருக்கும் என்பதைஒவ்வொருவரும் அனுபவிக்க வேண்டும்.

கல்லூரி விழாக்களின் போது அவள் எப்படி விசிலடிப்பாள்! அவள் மட்டுமா? எல்லாம் மாணவிகளும் செய்தனர். அது பெண்கள் கல்லூரி. எந்த இளைஞனும் அங்கில்லாமலிருந்ததே அப்போது பெரிய சுதந்திரம். ஒரு முறை, அனிதா தொலைவில் வருவதைப் பார்த்துவிட்டு அவளை வரவேற்பது போல விரலை வாயில் வைத்து விசிலடித்தாள். கல்லூரி முதல்வர் பின்னாலிருந்து திடீரென்று கண்ணில் பட்டார். அவள் எப்படி அவரைப் பார்க்காமல் போனாள்?

அவர், அவளைத் தன் அலுவலகத்திற்கு வரச்சொன்னார். பெண்கள் கல்லூரி, ஆண்கள் கல்லூரி, இருபாலார் கல்லூரி என்று அரைமணி நேரத்திற்கு பெரிய சொற்பொழிவு நடத்தினார். “நீ ஒரு பெண். அதுவும் இந்தியப் பெண்!”என்ற பாட்டையே மீண்டும் மீண்டும் பாடி, குமட்டுகிற அளவிற்கு வைத்துவிட்டார்.

ஒருவேளை விசிலடிக்க முடியாத அளவிற்கு பெண் பலவீனமாக இருப்பாளோ? அதைச் செய்யக்கூட ஓர்ஆணின் ஆதரவு அவளுக்குத் தேவைப்படுமா?

அவள் மிக மெலிதாக விசிலடிக்கத் தொடங்கினாள். விரைவில் அது உச்சத்தை அடைந்து விடலாம். அவளுக்கு திடீரென்று நிகழ்காலம் நினைவிற்கு வந்தது. ஒரு மெல்லிய ஒலி கூடக் கேட்கக்கூடாது. அவன் போவதற்கு முன்பு மூன்று முறை எச்சரித்துவிட்டுப் போனான். அவள் காற்றிழந்தவள் போலானாள்.

தண்ணீர்வேகமாக வந்து விழுந்தது. ஹரீனாவிற்கு பாம்புச்செவி. அவள் பக்கத்துவீட்டு மனிதர்கள் யாரிடமாவதுசொல்லி, கதவில் சாளரம் வழியாகப் பார்க்கச் சொல்வாள். ஐயோ!அவன் போவதற்கு முன்னால் ஏன் அவள் குளியலை முடிக்கவில்லை?

வீடு முழுவதும் நடந்து உடம்பைத் துடைத்துக் கொண்டாள். வாழ்க்கை முழுவதும் இப்படியான ஓர் ஓய்விலிருந்தால் எப்படியிருக்கும்? அவளுக்குச் சலிப்பு வரலாம். ஆனால், எப்போதாவது ஒரு முழுநாளை இப்படிக் கழிக்க முடிந்தால் எவ்வளவு பரபரப்பாக இருக்கும்?

அவள் அறைக்குள் போனாள்.என்ன அணிவது? ஆனால்,ஏன் அணியவேண்டும்? யாரிடமிருந்து மறைக்க அணிய வேண்டும்?



படுக்கையில் உட்கார்ந்தாள். மேஜையின் மீது ஒரு சிகரெட் பாக்கெட் இருந்தது. பக்கத்தில் டிரேயும். உதட்டில் சிரிப்பு மலர்ந்தது. ஒரு சிகரெட்டை உருவி உதடுகளுக்கிடையில் வைத்துக்கொண்டு புகைப்பது போல நடித்தாள். வேடிக்கையாக உணர்ந்தாள். செய்து பார்த்தாலென்ன? முதல் உறிஞ்சலிலேயே இருமல் வந்தது. வாயை மூடிக்கொண்டு இருமினாள்.

அவளுக்கு மீண்டும் ஹரீனாவின் ஞாபகம் வந்தது.

எதிர்வரிசையிலிருந்த கல்லூரி மாணவனின் அறை இவள் வீட்டைப் பார்த்திருந்தது. பூட்டிய வீட்டினுள் திருடனிருப்பதாக அவன் நினைத்து விடுவானோ? அவன் கதவை உடைத்துக்கொண்டு உள்ளே வந்துவிட்டால்?

கட்டுப்படுத்த முடியாத இருமல். படிப்படியாகக் குறைந்தது. முகம் முழுவதும் வியர்த்தது. கண்களில் நீர் நிறைந்தது.

சிறிதுநேரம் உன்னிப்பாகக்கவனித்தாள். ஹரீனாவின் வீட்டுக் குக்கர் விசிலடித்தது. கிரைண்டர் இரைச்சலிட்டது. மணி இப்போது பத்தரை. அந்தப் பையன் கல்லூரிக்குப் போயிருப்பானா? புல்லியும் பாட்டியும் வீட்டு வேலைக்குப் போயிருப்பார்களா? அதிர்ஷ்டவசமாக! அந்தப் பகுதியிலிருந்து எந்தச் சிறிய ஒலியுமில்லை. குளிக்கும் போது முடிந்திருந்த கூந்தலை அவிழ்த்தாள். அது சிடுக்காகியிருந்தது.

தலையை வாரிக் கொண்டே, “இன்று உனக்கு எந்தச் சங்கிலியும் கிடையாது. உனக்குச் சுதந்திரம். விடுமுறை!” என்றாள். சுதந்திரமாகத் தலைமுடி பறந்தது.

அவளுக்குப் பசித்தது. அவள் பங்கிற்கான இட்லி அடுப்படியில் இருந்தது. நான்கு இட்லிகளைச் சட்னி மற்றும் வெண்ணையோடு சாப்பிட்டு விட்டு, சர்க்கரை யின்றி ஒரு கிளாஸ் பால் குடித்தாள். சத்தமின்றித் தட்டையும்கிளாஸையும்வைத்துவிட்டுத் திரும்பினாள்.

"இனி மாலை வரை எதையும் கேட்கக்கூடாது" என்று தனக்குள் சொல்லிக்கொண்டாள்.

வரவேற்பு அறைக்குப் போனாள். ரேடியோவைப் போட நீண்ட கை தானாகப் பின்வாங்கியது.

பின்னால் நடந்தவாறு, கூண்டுக்குள் அடைபட்ட சிங்கம் போல உணர்ந்தாள். சுவர்கள் கூண்டு போலத்தெரிந்தன. அடைபட்ட சிங்கத்திற்கு தனக்குப் பிடிக்கும் போது கர்ஜிக்கும் உரிமையாவதுண்டு. அவளால்மெல்லியதாகக்கூட குரல்எழுப்பமுடியாது. ஒரு சத்தமும் ஏற்படுத்த முடியாமல் எப்படி வாழ முடியும்? எவ்வளவு மூச்சுத் திணற வைக்கும் செயல் இது!

நாள் முழுவதையும் இப்படி வெறுமே,உட்கார்ந்து, படித்துக் கடத்துவது என்பது சுவையற்ற,சலிப்பான இருப்பாக அல்லவா இருக்கும்? அவன் மாலை திரும்பி வந்தபிறகுஇதைக் கேட்டு வயிற்றைப் பிடித்துக்கொண்டு சிரிப்பான்!

நான்கு சுவர்களுக்குள் இங்குமங்கும் அலைவதிலும் சுற்றுவதிலும் ஏதாவது சுதந்திரம் இருக்கிறதா? சுதந்திரமென்பது அவள் கதவைத்திறந்து, தெருவில் நடந்து,உவகையோடு தடையின்றி இருப்பது. ஹரீனா, மூதாட்டி, கல்லூரி மாணவன், மற்றவர்கள் என்று எல்லோர் பார்வையிலும் முழுவதுமாகப் படுவது. சுதந்திரம் என்பது தனிமைப்படுதலா? சுதந்திரத்திற்காகவும்மகிழ்ச்சிக்காகவும் விலை கொடுக்கப்படவேண்டிய தேவையுடையவையா இரகசியங்கள்? எவ்வளவு சுய ஏமாற்றமும்மாயையும்!

கை தன்னிச்சையாகவரவேற்பு அறையின் விளக்கைப் போட்டது. உடனடியாக மூளை தந்த ஆணையால் மனம் விளக்கை அணைத்தது. அவள் எரிச்சலடைந்தாள்.

அறையிலுள்ள அவன் அலமாரியைத் திறந்தாள். அவனுடைய டிரவுசர், சட்டையைப் போட்டுக்கொண்டாள். அவளை யாரும் இந்த உடையில் பார்த்து விடக்கூடாதா?

வீட்டின் கதவு வெளிப்புறமாகப் பூட்டப்பட்டுள்ளது. ஜன்னல் கதவைத் திறந்து ஹரீனாவைக் கூப்பிடலாமா? அவள் பூட்டிய கதவு பற்றிக் கேட்டால் விளக்கம் சொல்லியாகவேண்டும். பொய் சொல்வது எளிதல்ல. உண்மையைச் சொன்னாலும் இப்படிப்பட்ட 'மனநிலைகள்' அவளுக்குப் புரியாது.

இதழின் வாட்டமாய், மனம் வாடியது.

அவள் சட்டையையும் டிரவுசரையும் கழற்றித் தூக்கியெறிந்தாள். வாழ்க்கை மிகமிக கட்டுப்பாடுகள் உடையதுஎன்று நினைத்தாள். தனக்காக வாழாமல் யாருக்காகவோ தான் வாழ்வதாக நினைத்தாள்! பச்சாதாபம் எழ அவள் கண்கள் கருமையாயின. எந்தக் கணமும் அவளுடையதல்ல. ஒவ்வொன்றும் கடனாகப் பெறப்பட்டவை. துல்லியமாக அதற்கு என்ன விலை?சுய கடனாளியாவதுதான்.

இந்த மாதிரியான எண்ணங்கள் மனதில் கனமாக ஏற கண்கள் மூடிக்கொண்டன. எண்ணங்களிலிருந்து விலகி, தலையணையை அணைத்துக் கொண்டுஅவள் தூங்கிப் போனாள்.

அவள் கண் விழித்தபோது மாலை ஐந்தாகி யிருந்தது. சுதந்திரக் கணங்கள் மேற்கை நோக்கிப் பறந்திருந்தன. கையிலிருப்பது பத்து பதினைந்து நிமிடங்கள்தான். அவன் எப்போது வேண்டுமானாலும் வந்துவிடலாம். அவன் கதவைத் திறக்கும்போது அவளுடைய தற்போதை நிலையைப் பார்ப்பான். படுக்கையில் மல்லாக்க கிடந்தபடி, கதவு திறந்திருக்கிறது. ஓ, பெரிய கண்ணாடி அவளுடைய தற்போதைய நிலையைக் காட்டியது. அதுகேலிக்குரியது. அவள் திடுக்கிட்டாள், படுக்கையில் ஒரு காபரே பெண் போல.

வேகமாக எழுந்து புடவையை அணிந்தாள். தலையைச் சீவிக்கொண்டு அலங்கரித்துக் கொண்டாள். கண்ணாடியைப் பார்த்தாள்.

கடைசியில், பரிச்சயமான முகமும் உருவமும் - நிம்மதியாக இருந்தது. கையில் அன்றைய செய்தித்தாளோடு சோபாவில் உட்கார்ந்தாள், பூட்டு திறக்கும் ஓசைக்காகக் காத்திருந்தபடி.

ஹரீனா, மூதாட்டி, புல்லி ஆகியவர்களின் அருகாமை இல்லாதபோதும், சுதந்திரக் கணங்களைத் தான் வேகமாகச் சுருக்கிக்கொண்டது ஏன் என்று அவள் ஆச்சரியப்பட்டாள்.

கழிக்கப்படாத கணங்கள் நழுவிப் போவதை அறியாமல்.

---

வைதேகி (ஜானகி ஸ்ரீநிவாசமூர்த்தி)நவீன கன்னட இலக்கிய பெண் படைப்பாளி. ஏழு சிறுகதைத் தொகுப்புகள், மூன்று கவிதைத் தொகுப்புகள்,ஒரு நாவல், ஐந்து வாழ்க்கை வரலாற்று நூல்கள், மூன்று கட்டுரைத் தொகுப்புகள், பதினைந்து சிறுவர் நாடகங்கள்,ஐந்து மொழிபெயர்ப்பு நூல்கள் என்று பல பங்களிப்புகள் உடையவர். அனுபமா, மாஸ்தி, எம்.கே. இந்திரா, நிரஞ்சனா, தன சிந்தாமணி, கதா என்று பல விருதுகள் பெற்றவர். 'கிரௌஞ்ச பட்சிகள்' என்ற சிறுகதைத் தொகுப்புக்காக சாகித்ய அகாதெமி விருது பெற்றவர். இச்சிறுகதை 'சகுந்தலாவுடன் ஒரு மதியப் பொழுதும் மற்ற சிறுகதைகளும்' என்ற தொகுப்பிலிருந்து எடுக்கப்பட்டுள்ளது.

*நன்றி:* An Afternoon With Shakunthala and Other Stories, Translation into English: SukanyaKanarally, Katha Bharati Series, The Library of Indian Classics, SahithyaAkademy

**தி.இரா. மீனா**<meenmix@yahoo.com>

# இறந்த நிகழ்காலத்தின் நாதம்

**டி. கண்ணன்**

சமீப காலங்களாக
அருகாமை பாடல்கள்
தொலைதூரத்திலும் (உபயம்: இரண்டாம் ஆட்ட சைக்கிள் மிதி)
தொலைதூரத்து பாடல்கள்
அருகாமையிலும் கேட்கின்றன
தொலைதூரம் அழகுதான்
நுணுக்கங்களை நுட்பங்கள் அழிப்பது (மீறுவது)
அதனினும் அழகு

அடானா ராகத்தில்
பல வருடங்களாக
உன்னைத் தேடி வந்து கொண்டேயிருக்கிறாள் ஒருத்தி
சூலமங்கலத்தின் வெங்கலக் குரலில்
அறியாமல்
காலம் பிறழ்ந்து
அடர் இசை வனத்தில் அலைந்து கொண்டிருக்கிறாய்
நீ



இரண்டாம் ஆட்டம் முடிந்து
சைக்கிள் மிதித்து கொண்டிருக்கிறான்
அவன்
திருவிழாவில் பாடல் ஒன்று ஒலிக்கிறது
மிதிப்பவனுக்கு அருகாமையிலும்
பின்னால் அமர்ந்து கொண்டிருப்பவனுக்கு
தூரத்திலும் ஒலிக்கிறது
ஊர் நெருங்க மறுக்கிறது
பாடல் ஓய்ந்து கொண்டிருக்கிறது

ஒரே இசைதான்
ஒருவன் அதனிடத்திலும்
மற்றவன் அது பிறந்த காலத்திலும்
லயித்துக் கிடக்கிறார்கள்
மலை முகடுகளுக்கு பின்னால் கிடந்த
தொலைதூர மதியத்தில்
இருவரும் ஒருவரே
அப்போது காலம் களையிழந்து கிடக்க
இறந்த நிகழ்காலத்தின் நாதம் ஓங்கிக் கொண்டிருக்கிறது ●

**டி. கண்ணன்**
<krishnaswamy164@gmail.com>

# அரசியலாகிய ஒரு பாடகி!

**நிலாந்தன்**

ஒருவைரஸ் காலத்தில் 'வைரலாகிய' ஒரு குரல் யொகானியினுடையது. அந்தப் பாடலை அவர் கரகரத்த குழந்தைக் குரலில் பாடத் தொடங்குகிறார். நோகாமல் அதிகப் பிரயத்தனமின்றி லேசாக தலையை அசைத்து பாடுகிறார். காணொளியின் முழு சட்டகத்துக்குள்ளும் அவருடைய முகம் குழந்தை பிள்ளைத்தனமாக சிரித்துக்கொண்டு நிறைகிறது. அது அப்படியொன்றும் உன்னதமான, நுட்பமான பாடல் அல்ல. அவர் பாடிய ஏனைய பாடல்களும் உன்னதமானவை என்று கூற முடியாது. எனினும் அது ஒரு எளிமையான பாடலாக இருந்தபடியால் எளிதில் வைரல் ஆகியது.

சமூக வலைத்தளங்களின் காலத்தில் வைரலாகும் விடயங்கள் எல்லாமும் ஆழமானவையாக, உன்னதம் ஆனவையாக இருக்க வேண்டும் என்றில்லை. அதன் ஜனரஞ்சகப் பண்பு; அது வெளிவரும் காலம்; அதைக் கொண்டாடும் பிரபலங்கள் போன்ற பல விடயங்கள் அது வைரலாகும் தன்மையைத் தீர்மானிக்கின்றன.

அமரர் நெவில் ஜெயவீர மதிக்கப்படும் ஒரு சிவில் அதிகாரி. அவர் பல ஆண்டுகளுக்கு முன்பு பொருளியல் நோக்கு சஞ்சிகையில் பின்வருமாறு கூறியிருந்தார்" புத்திசாலித் தனத்திற்கும் ஜனரஞ்சகத்திற்கும் பொதுவாகப் பொருந்தி வருவதில்லை" என்று. நடிகர் தனுஷின் "வை திஸ் கொலவெறி" பாடலுக்கு அதுதான் நடந்தது; யொகானிக்கும் அதுதான் நடந்தது.



யொகானி பாடலை பல தமிழர்கள் விரும்பி ரசித்தார்கள்; கொண்டாடினார்கள். சமூகவலைத் தளங்களில் பகிர்ந்தார்கள். சுவிட்சர்லாந்தில் இருக்கும் ஒரு தமிழ் ஒளிப்படக் கலைஞர் முகநூலில் அவருடைய பாடலை அறிமுகப்படுத்திய போது நான் யொகானியைத் தேடி அவருடைய ஏனைய பாடல்களுக்குள் போனேன். அவை என்னைப் பிரமிக்க வைக்கவில்லை.

அவருடைய குடும்ப விவரத்தைத் தேடினேன். அவருடைய தந்தை ஒரு ராணுவ அதிகாரி என்று தெரிந்தது. அவர் ஒரு கீழ்நிலை அதிகாரியாக இருந்திருக்க முடியாது என்ற ஊகம் எனக்கு தொடக்கத்திலேயே இருந்தது. யொகானி வெளிநாடுகளுக்குப் போகக்கூடிய வளம்பொருந்திய ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர் என்று தெரிந்தது. அவருடைய தாயார் ஒரு விமானப் பணிப்பெண் என்று கூறப்பட்டது. அதனால் அவருக்கு அந்த வாய்ப்பு கிடைத்திருக்கும் என்று யோசித்தேன்.

ஆனால், ருவிற்றரில் புலம்பெயர்ந்த தமிழர்களில் சிலர் அவருடைய சர்ச்சைக்குரிய பாடல் ஒன்றின் காணொளித் துண்டைப் பகிர்ந்தபோது அவரைப் பற்றிய பின்னணி மெல்ல மெல்ல தெரியத் தொடங்கியது. இது தொடர்பில் ருவிற்றரில் நீண்ட வாதப்பிரதிவாதங்களும் நடந்தன. நடந்து கொண்டிருக்கின்றன.

யொகானி, இலங்கைத்தமிழ் மக்களின் போராட்டத்தை பயங்கரவாதமாக சித்தரிக்கிறார். தனது தந்தையின் தரப்பை வடக்கையும் கிழக்கையும் இணைத்த வீரர்கள்; கதாநாயகர்கள் என்று புகழ்கிறார்.

சர்ச்சைக்குரிய அப்பாடலின் நறுக்கப்பட்ட காணொளித் துண்டு தமிழ் சமூக வலைத்தளங்களில் அதிகம் பரவத் தொடங்கியது. தமிழ்த் தரப்பில்



அவருக்கிருந்த ஆதரவு குறையத் தொடங்கியது. அவருடைய தகப்பனார் யார் என்பதைக் கண்டுபிடித்து, போரில் அவருடைய பங்களிப்பு என்ன என்பதைக் கண்டுபிடித்து, புலம்பெயர்ந்த தமிழ்த் தரப்பிலிருந்து வரும் ஊடகங்கள் வெளிப்படுத்த தொடங்கின.

எனினும் யொகானி உலகப் பிரபல்யம் அடைந்துவிட்டார். இசையின் மகத்துவம் அதுதான். அது ஒரு உன்னதமான பாடல் இல்லை என்ற போதும் அதன் எளிமையும் ஜனரஞ்சகத் தனமும் சமூகவலைத்தளங்களின் காலமும் அவருடைய பாடலை வைரல் ஆக்கின. சரத் பொன்சேகா அவரை புகழும்போது அவருடைய தந்தையையும் சேர்ந்து கொண்டாடினார். விடுதலைப்புலிகள் இயக்கத்துக்கு மாவிலாற்றில் முதலாவது பாடத்தைக் கற்பித்தது அவருடைய தந்தை என்று கூறினார். உலகம் முழுவதும் வைரலாகிய ஒரு பாடகியை அவர் தன்னுடைய ராணுவ சட்டகத்துக்குள், யுத்த வெற்றி வாதத்துக்குள் சுருக்கினார். அங்கேதான் சிங்கள பௌத்த பெருந்தேசியவாதத்தின் குறுக்கம் தெரிந்தது. உலகம் முழுவதும் தெரியவந்த ஒரு பாடகியை அவர்கள் எப்படி உரிமை கோரினார்கள்என்பது.

அது ஒரு உன்னதமான பாடல் இல்லை என்ற போதிலும் இசைக்கு மொழி இல்லை, இனம் இல்லை, மதம் இல்லை; அது உலகளாவிய ஒரு மொழி என்பதனால் அந்த பாடலுக்கு அத்தனை பிரபலம் கிடைத்தது. எனினும் யொகானியின் அரசியல் நிலைப்பாடு அல்லது அவருடைய அரசியல் சாய்வு தமிழ் மக்கள் மத்தியில் அந்தப் பாடலுக்குள்ள கவர்ச்சியைக் குறைத்துவிட்டது. அவர் தனது தந்தையின் மகளாக ஓர் அரசியல் நிலைப்பாட்டை எடுப்பது அவருடைய தெரிவு. தமிழ் மக்களின் ஆயுதப் போராட்டத்தைப் பயங்கரவாதமாக சித்தரிப்பதும் தன் தந்தையின் தரப்பை வீரர்களாக சித்தரிப்பதும் அவருடைய தெரிவு. ஆனால், அவருடைய பாடலை கொண்டாடுவதா



இல்லையா என்பதும் தமிழ் மக்களின் தெரிவு. ஒரு கலைஞரின் அரசியல் நிலைப்பாடு என்பது இந்த இடத்தில் கவனிப்புக்குரியதாகிறது. அதிலவருடைய அறம் சார்ந்த நிலைப்பாடு எது என்ற கேள்வி எழுகிறது.

தனது பாடல் இப்படி வைரலாக மாறும் என்று யொகானி நிச்சயமாக நம்பியிருக்க மாட்டார். அவருடைய ஏனைய பாடல்களைப் பார்க்கும் யாரும் அதை ஊகிக்கலாம். ஆனால், அந்தப் பாடல் உலகம் முழுவதும் பார்க்கப்படும் ஒரு நிலைமை வந்தபோதுதான் அவருடைய அரசியல் நிலைப்பாடு குறித்த விமர்சனங்களும் மேலெழுந்தன. இறந்த காலத்துக்கு பொறுப்புக்கூறத் தயாரற்ற ஒரு படைத் தரப்பை வெற்றி வீரர்களாக கொண்டாடும் ஒரு பாடகியைப் போர்க்குற்றங்களுக்கு எதிராகப் போராடுவோரும், மனித குலத்துக்கு எதிராக இழைக்கப்பட்ட குற்றங்களுக்கு எதிராக போராடுவோரும் இனப்படுகொலைக்கு எதிராக நீதி கேட்டுப் போராடும் மக்கள் கூட்டங்களும் கொண்டாடுவார்களா?

படைப்பாளியும் புலமையாளருமான எனது நண்பர் ஒருவர் கேட்டார்: “யொகானியின் அரசியலைப் பற்றி எதுவும் தெரியாமல் அவரை ரசிப்பவர்கள் ஒருபுறமிருக்கட்டும், இந்தியா அவருக்கு ஏன் ஒரு கலாச்சார தூதுவர் அந்தஸ்தைக் கொடுத்தது? அப்படி கொடுக்கும்போது இந்தியாவுக்கு யொகானியின் தகப்பனுடைய பின்னணி பற்றித் தெரியாமல் இருந்திருக்குமா?” என்று.

ஆனால், யொகானி அவ்வாறு இந்தியாவுக்கும் இலங்கைக்கும் இடையிலான கலாச்சார தூதுவராக உத்தியோகப்பூர்வமாக நியமிக்கப்படவில்லை என்று கூறப்படுகிறது. வைரலாக மாறிய அவருடைய பாடலை புகழ்ந்து கொழும்பிலுள்ள இந்திய தூதரகம் செப்டம்பர் 18ஆம் திகதி தனது உத்தியோகபூர்வ முகநூல் பக்கத்தில் எழுதிய குறிப்பில், ‘மிகப் புதிய கலாச்சாரத் தூதுவர்’ என்ற வார்த்தையைப் பயன்படுத்தியதாகவும் அது நாட்டின் உத்தியோகபூர்வ பிரகடனம் அல்லவென்றும் கூறப்பட்டுள்ளது. உதாரணமாக இந்தியா ஏ.ஆர்.ரகுமானை ஒரு கலாச்சார தூதுவராக உத்தியோகப்பூர்வமாகப் பிரகடனம் செய்திருக்கிறது. ஆனால், கொழும்பில் உள்ள இந்தியத் தூதரகமோ அல்லது கலாச்சார உறவுகளுக்கான இந்திய கவுன்சிலோ அவ்வாறு யோகானியை இரண்டு நாடுகளுக்கும் இடையிலான கலாச்சார தூதுவராக உத்தியோகப்பூர்வமாகப் பிரகடனம் செய்யவில்லை என்றும் கூறப்படுகிறது. தூதரகத்தின் உத்தியோகபூர்வ முகநூல் பக்கத்தில் காணப்பட்ட மிகப் புதிய கலாச்சார தூதுவர் என்ற வார்த்தையை வைத்து நெற்றிசன்கள் அதை இந்தியாவின் உத்தியோகபூர்வ பிரகடனமாக பிரசித்தப்படுத்தி விட்டார்கள் என்றும் கூறப்படுகிறது.

எனினும், இந்த இடத்தில் ஒரு கேள்வியைக் கேட்க வேண்டும். அவர் எந்த அடிப்படையில் இரண்டு நாடுகளுக்கும் இடையிலான மிகப்புதிய கலாச்சார தூதுவர் ஆனார்? வைரல் ஆகிய ஒரே காரணத்துக்காகவா? அவரை அவ்வாறு அழைப்பதன் மூலம் கொழும்பில் உள்ள இந்தியத் தூதரகம் சிங்கள மக்களுக்கு உணர்த்த முயலும், கனெக்ரிவிற்றி’ என்ன? தமிழ் மக்களுக்கு உணர்த்த முயலும் ‘கனெக்ரிவிற்றி” என்ன?

**நிலாந்தன்**<nillanthan@gmail.com>

# நினைவுகளும் கனவுகளும்

**பாவண்ணன்**

நான் 1974இல்பள்ளியிறுதி வகுப்பில் படித்தபோது எங்களுடைய ஆங்கிலப் பாடத்தில் தாகூரின் 'கீதாஞ்சலி' இடம்பெற்றிருந்தது. எங்கள் ஆங்கில ஆசிரியராக இருந்த ராமானதன் ஐயா அந்தப் பிரார்த்தனைப் பாட்டின் முதல் வரியைப் படிக்கத் தொடங்கியதுமே உருகிவிட்டார். ஒவ்வொரு சொல்லையும் அவரே சொந்தமாகச் சொல்லி முறையிட்டு மன்றாடுவதுபோலசொன்னார்.இரண்டே இரண்டு பத்திகள்தான் எங்களுக்குப் பாடமாக இருந்தன. ஆனால், அப்பாடலை ஒவ்வொரு வரியாக ஒரு வாரம் முழுதும் நடத்தினார். அப்பாடலின் ஒவ்வொரு சொல்லும் எங்கள் நெஞ்சில் பதிந்துவிட்டது.

அடுத்த வாரம் தொடங்கியதும் புதிய பாடத்தைத் தொடங்குவார் என நாங்கள் அனைவரும் நினைத்திருந்த வேளையில், எங்கள் ஐயா தன் பையிலிருந்து ஒரு புதிய புத்தகத்தை எடுத்து, அதிலிருந்து ஒரு பாட்டைப் படித்தார். ஆனால், அது பிரார்த்தனைப் பாடலல்ல, ஒரு குழந்தை தன் அம்மாவிடம் உரையாடுவது போன்ற பாடல்.ஐயாவின் குரலும் அன்று குழந்தையைப்போலக் கொஞ்சியது. பாடலைப் படித்துவிட்டு, அதற்குப் பொருளையும் சொன்ன பிறகு, “இதுவும் தாகூர் பாட்டு. இதப் பத்தியும் நீங்க தெரிஞ்சிக்கணும். இந்தியாவில் இலக்கியத்துக்காக நோபல் பரிசுவாங்கிய ஒரே கவிஞர் தாகூர்” என்று பெருமையுடன் சொன்னார்.

பாடப்பட்டியலில் இல்லாத அந்தச் சிறிய புத்தகத்தை நாங்கள் அனைவருமே அவரிடமிருந்து வாங்கிப் பார்த்தோம்.'Crescent Moon'என்று அட்டையில் குறிப்பிடப்பட்டிருந்தது. பலரும் அத்தலைப்பைப் படித்துவிட்டு மௌனமாக இருப்பதைப் பார்த்துவிட்டு ஐயாவே, “மூன்னு சொன்னா நிலா, அது தெரியுமில்லை? க்ரெசென்ட் மூன்னு சொன்னா வளர்பிறை நிலா. கொஞ்சம் கொஞ்சமா பெரிசா வானத்திலேயே வளரக்கூடிய நிலா. புரியுதா?” என்றார். நாங்கள் அனைவரும் புரிந்ததுபோல புன்னகையுடன் தலையாட்டினோம்.

அதே புத்தகத்தை இரண்டாண்டுகள் கழித்து நான் கல்லூரியில் பட்டப்படிப்புக்கு சேர்ந்திருந்த சமயத்தில் எங்கள் ஆசிரியர் தங்கப்பாவின் வீட்டிலிருந்து எடுத்துச் சென்று படித்தேன். நாற்பது பாடல்களே அதில் இருந்தன. அதனால், ஒரே இரவில் படித்துவிட்டேன். நிலவின் பெயரை தலைப்பில் கொண்டிருந்த அப்புத்தகத்தில் நிலவைப்பற்றிய பாடலே இல்லை. குழந்தை கொஞ்சம் கொஞ்சமாக வளரும் வளர்ச்சியை அடையாளப்படுத்துவதற்காகவே அந்தச் சொல்லைத் தாகூர் பயன்படுத்திக்கொண்டார் என்பது புரிந்தது. குழந்தையின் எண்ண ஓட்டங்களைச் சித்தரிக்கும் ஒவ்வொரு வரியையும் படிக்கப்படிக்கமகிழ்ச்சியாக இருந்தது.



1976இல் நான் படித்த அந்தப் பாடல் தொகுதியின் தமிழ் மொழிபெயர்ப்பைப் போன மாதம் பெங்களூர் நூலகத்தில் பார்த்தேன். தாகூரின் பெயரை புத்தகத்தின் அட்டையில் பார்த்துவிட்டு எடுத்துப் பிரித்தபோதுதான், ஒரு காலத்தில் நான் விரும்பிப் படித்த'Crescent Moon'தொகுதியின் மொழிபெயர்ப்பு என்பது புரிந்தது. ஒருகணம் எங்கள் பள்ளியாசிரியர் ராமனாதன் ஐயாவின் முகம் என் நெஞ்சில் நிழலாடியது. மனம் போன போக்கில் ஒரு பக்கத்தைப் புரட்டிப் படித்தேன். அந்தக் கற்பனை உலகம் என்னை ஒரு காந்தம் போல இழுத்துக்கொண்டது. எனக்கு அருகில் நின்று என்னோடு உரையாடும் குழந்தையின் குரலை அப்பாடலில் நான் கேட்டேன். வீட்டுக்கு எடுத்துச் சென்று படிக்கும் முடிவோடு அந்தப் புத்தகத்தை எடுத்துக்கொண்டேன்.

1949இல் முதல் பதிப்பாகவும் 1953இல் இரண்டாவது பதிப்பாகவும் வெளிவந்த அந்தப் புத்தகத்தை அன்றைய தேதி வரையில் ஆறு பேர் மட்டுமே படித்திருந்தார்கள் என்பதை புத்தகத்தின் பின்னட்டையோடு ஒட்டிவைக்கப் பட்டிருந்த பதிவுத்தாளில் தெரிந்தது. ஏழாவது ஆளாக நான் என்னுடைய எண்ணைப் பதிவு செய்துவிட்டு, புத்தகத்தை எடுத்துக்கொண்டு வெளியேவந்தேன்.

'கீதாஞ்சலி' எழுதி இலக்கியத்துக்கான நோபல் பரிசைப் பெற்ற தாகூர் குழந்தைகளுக்காக எழுதிய புத்தகங்களில்'Crescent Moon'ஒன்று. தாகூர் வங்க மொழியில் முதலில் எழுதிய அப்பாடல்களை, சிறிது காலம் கழித்து அவரே ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டார். குறைந்த ஆங்கில மொழிப்பயிற்சி உள்ளவர்களும் புரிந்துகொள்ளும் வகையில், ஒவ்வொருபாட்டையும்தளர்வான உரைநடை மொழியிலேயே மொழிபெயர்த்தார். ஒரு பாட்டில் குழந்தை தன் தாயாரை நோக்கி உரையாடுகிறது.இன்னொருபாட்டில்தாயார் தன் குழந்தையை நோக்கி உரையாடுகிறாள். மாறி மாறி நிகழும் இந்த உரையாடல்களே அத்தொகுதி முழுக்க நிறைந்திருந்தது. ஆங்கிலத்தில் வெளிவந்த அத்தொகுதியை 'வளர்மதி'என்ற தலைப்பில் லலிதா என்பவர் தமிழில் மொழிபெயர்க்க, ஸ்டார் பிரசுரம் வெளியிட்டிருக்கிறது.

நாற்பது பாடல்களையும் ஒரே மூச்சில் படித்துவிட்டேன்.அன்று எங்கள் வகுப்பில் ராமனாதன் ஐயா படித்துவிட்டு பொருள் சொன்ன பாடலை முதல் வாசிப்பிலேயே கண்டுபிடித்துவிட்டேன். அப்போது நான் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. குழந்தை தன் தாயிடம் ஒரு கேள்வி கேட்கிறது. பிறகு தான் எடுத்திருக்கும் ஒரு முடிவை உருக்கமான குரலில் தெரிவிக்கிறது. அவ்வளவுதான் அக்கவிதை. ஆனால், படித்தபோது மனம் கரைந்துவிட்டது.

“அம்மா, என் அருமையான அம்மா, நான் உன் குழந்தையாக இல்லாமல் ஒரு நாய்க்குட்டியாக இருந்து, உன்னுடைய தட்டில் வாய்வைத்துத் தின்ன முயற்சி செய்தால், நீ என்னைத் தடுத்து, ‘போக்கிரி நாய்க்குட்டியே, சீ போ’ என்று வெறுத்து விரட்டுவாயா” என்பது ஒரு கேள்வி. பிறகு, “அப்படித்தான் நீ நடந்துகொள்வாய் என்றால் நான் உன்னை நெருங்கிவர மாட்டேன் அம்மா. நீ எனக்கு ஊட்டிவிடவும் சம்மதிக்கமாட்டேன்” என்று தெரிவிக்கிறது.

“அம்மா, என் அருமையான அம்மா. நான் உன் குழந்தையாக இல்லாமல் ஒரு பச்சைக்கிளியாக இருந்தால், எங்காவது தப்பித்துப் பறந்துபோய் விடுவேன் என்று நினைத்து என்னைக் கூண்டில் அடைத்துவிடுவாயா? அட, நன்றி கெட்ட பறவையே, இரவும் பகலும் கூண்டுக் குச்சிகளைக் கொத்திக் கடித்துக்கொண்டே இருக்கிறாயே என்று கடிந்துகொள்வாயா” என்பது மற்றொரு கேள்வி. “அப்படித்தான் நீ நடந்துகொள்வாய் என்றால்நீ என்னை நெருங்கவோ எடுத்து அணைத்துக் கொஞ்சவோ சம்மதிக்கமாட்டேன். நான் உன்னைவிட்டு விலகி காட்டுக்கே சென்றுவிடுவேன் அம்மா” என்று தெரிவிக்கிறது.

எல்லா உயிரும் தானே என நினைக்கும் அந்தக் குழந்தையின் எளிய சொற்களில் அடங்கியிருக்கும் அன்பை எண்ணி வியக்காமல் இருக்க முடியவில்லை. அன்பு ஒரு வற்றாத மகாநதியெனக் குழந்தைகள் நெஞ்சிலிருந்து பிறந்து கரைபுரண்டோடுகிறது.

அடுத்தவரைப்போல இருக்கவேண்டும் என்று கனவு காணாதவர்களே இருக்கமுடியாது. உலகில் பிறந்த ஒவ்வொருவருக்கும் ஒரு கணமேனும் அந்தக் கனவு பிறப்பது இயற்கை. குழந்தைகளிடம் அத்தகு கனவுகள் நிறைந்திருக்கின்றன. எப்போதும் கனவில் திளைத்திருக்கும் ஒரு குழந்தையை தாகூர் இன்னொரு கவிதையில் பார்க்கவைக்கிறார்.

இக்கவிதையும் ஒரு குழந்தையின் கோரிக்கையை முன்வைக்கும் வகையில் அமைந்திருக்கிறது. அது தினமும் பள்ளிக்குச் செல்லும் குழந்தை. காலையில் பள்ளிக்கு நடந்துசெல்லும் போதெல்லாம் அது தெருவில், ‘வளையல், கண்ணாடி வளையல்’ என கூவிக்கூவி விற்றபடி செல்லும் ஒரு வியாபாரியைப் பார்க்கிறது. அந்த நடையும் அந்தக் குரலும் அவனுடைய சுதந்திரமும் அக்குழந்தைக்கு மிகவும் பிடித்துவிடுகின்றன. அக்கணத்தில் பள்ளிக்குச் செல்வதற்கு மாறாக, ‘வளையல், பட்டு வளையல்’ என்று உல்லாசமாகக் கூவியபடி தெருதோறும் செல்லும் வியாபாரியாக இருந்துவிட்டால் ஒவ்வொரு பொழுதும் எவ்வளவு இன்பமயமாக இருக்கும் என்று நினைத்தபடி கனவில் திளைக்கிறது.

மாலையில் பள்ளிக்கூடம் முடிந்து வீட்டுக்குத் திரும்பும் வழியில், ஒரு வீட்டின் முன்பக்கத்தில் இருக்கும் தோட்டத்தில் ஒரு வேலைக்காரன் தன்னிடம் இருக்கும் மண்வெட்டியால் நிலத்தைக் கொத்தி மண்ணைச் சீர்படுத்திக்கொண்டிருக்கும் காட்சியைக் குழந்தை பார்க்கிறது. அவனுடைய ஆடை கலைந்து அழுக்கேறியிருக்கிறது. தலைமுடி கலைந்திருக்கிறது. ஆனாலும், அதைப்பற்றிய கவலை எதுவுமின்றி, அவன் சுதந்திரமாக மண்ணைக் கொத்திக்கொண்டே இருக்கிறான். யாரும் தடுக்காத அவனுடைய சுதந்திரமும் அந்த வேலையும் அக்குழந்தையை மிகவும் கவர்ந்துவிடுகின்றன. அக்கணத்தில் பள்ளிக்குச் செல்வதற்கு மாறாகத் தோட்டக்காரனாக மாறிவிட்டால் எவ்வளவு இன்பமயமாக இருக்கும் என்று நினைத்தபடி கனவில் திளைக்கிறது.

இரவு கவிந்ததும் அக்குழந்தைக்கு உணவு கொடுத்து நேரத்தோடு படுக்கையில் படுக்கவைத்துவிட்டுச் செல்கிறாள், அம்மா. உறக்கமில்லாத குழந்தை திறந்திருக்கும் ஜன்னல் வழியாக இருளில் வேடிக்கை பார்த்தபடி பொழுதுபோக்குகிறது. மனித நடமாட்டமே இல்லாமல் வெறுமை சூழ்ந்த தெருவில் கைவிளக்கை வீசிவீசி நடந்துவரும் இரவுக்காவல்காரன் மீது அதன் பார்வை பதிகிறது. காலடியில் நீண்டுவிழும் தன் நிழலே தனக்குத் துணையாகத்தனித்து நடந்துசெல்லும் அவனுடைய தோற்றம் அக்குழந்தைக்கு வசீகரமாகக் காட்சியளிக்கிறது.கைகளை வீசிவீசி நடக்கும் இரவுக்காவல்காரனாக மாறிவிட்டால் வாழ்க்கை எவ்வளவு சுவையுடையதாக இருக்கும் என்று நினைத்தபடி கனவில் திளைக்கிறது. குழந்தையின் களங்கமில்லாத ஒவ்வொரு கனவும் கவிதையின் அழகைப் பலமடங்காக அதிகரிக்கவைக்கிறது.

‘படகோட்டி’ என்றொரு கவிதை. இதுவும் ஒரு குழந்தை தன் தாயிடம் முன்வைக்கும் வேண்டுகோள் வகையிலேயே அமைந்திருந்தது. அந்தக் குழந்தைக்கு ஊருக்கு வெளியே புரண்டோடும் ஆற்றின் மீது ஆசை இருக்கிறது. குறிப்பாகத் தனது ஊரின் பக்கமிருக்கிற கரையைவிட, ஒருபோதும் காணாத அக்கரையின் மீதான ஆசை அதிகம். அக்கரைக்கும் இக்கரைக்கும் மாறிமாறி ஓய்வில்லாமல் பயணம் செய்யும் படகுகள் மீதான ஆசையும் அதிகம்.அந்த ஆசை, அக்குழந்தையின் மனத்தில் ஒரு படகோட்டியாக மாறிவிடும் ஆசையாக உருமாறிவிடுகிறது. அக்கணமே அது தன் தாயிடம் ’என் அன்புள்ள அம்மா, நான் வளர்ந்து பெரியவனானதும் இக்கரையிலிருந்து அக்கரைக்குச் செல்லும் படகோட்டியாக இருக்கவே ஆசைப்படுகிறேன்’ என்று முறையிடுகிறது.காலை முதல் நண்பகல் வரைக்கும் படகோட்டும் களைப்பில் பசித்ததுமே ஓடோடி அம்மாவை நாடி வந்துவிடுவதாகத் தெரிவிக்கிறது. உணவுக்குப் பிறகு மீண்டும் படகோட்டச் சென்று இருள் கவியும் வேளையில் திரும்பிவிடுவதாக



வாக்களிக்கிறது.

அதுவரை முன்வைத்த எந்த வேண்டுகோளுக்கும் அம்மா ஒரு பதிலையும் கொடுக்கவில்லை. அது குழந்தையை வேறொரு கோணத்தில் யோசிக்கத் தூண்டுகிறது.இறுதி முயற்சியாகப் பட்டணத்துக்குப் போய் தனியாக வேலை செய்து வாழும் அப்பாவைப்போல ஒருபோதும் அம்மாவை தனிமையில் விட்டுச் செல்லமாட்டேன் என நம்பிக்கையளித்துவிட்டுப் புன்னகைக்கிறது.

அவ்வளவுதான் கவிதை. அம்மாவுக்குப் பிடித்ததை நுட்பமாகக் கண்டறிந்துவிடும் குழந்தையின் அறிவாற்றல் மகத்தானது.

மேலும் சில பக்கங்களுக்கு அப்பால் ‘காகிதப்படகுகள்’ என்ற தலைப்பில் மற்றொரு நல்ல கவிதை. இதுவும் ஒரு குழந்தையின் கூற்று. அக்குழந்தை ஒவ்வொரு நாளும் காகிதத்தில் படகு செய்து தன் வீட்டையொட்டி ஓடும் நீரோடையில் தினந்தோறும் மிதக்க விடுகிறது. அந்தப் படகில் தன் பெயரையும் தன் சிற்றூரின் பெயரையும் மறக்காமல் எழுதிவைக்கிறது. அப்படகு சென்று சேரும் தேசத்தில் யாராவது இந்தப் படகைப் பார்க்கக்கூடும் என அக்குழந்தை உறுதியாக நம்புகிறது. அப்போது அவர்கள் தன்னைப்பற்றித் தெரிந்துகொள்வதற்கு இந்தத் தகவல்கள் உதவியாக இருக்குமென அது நினைத்துக்கொள்கிறது. அவர்களுக்கு அன்பளிப்பாக எதையாவது அனுப்பினால் நன்றாக இருக்குமே என நினைத்து, தன் வீட்டுத்தோட்டத்தில் பூத்த மலர்களைப் பறித்தெடுத்துவந்து படகை நிரப்பிவைக்கிறது. மிதந்துபோகும் படகைப் பார்த்து மகிழ்ச்சியில் திளைக்கிறது.

பெருமிதத்தில் மனம் விம்மத் தற்செயலாக வானத்தைப் பார்க்கிறது அக்குழந்தை. அங்கே சின்னசின்ன மேகங்களைப் பார்க்கிறது. ஒரு கோணத்தில் அம்மேகங்கள் அனைத்துமே வானத்தில் மிதந்துபோகும் படகுகளைப்போலத் தெரிகிறது. வானத்தில் நீந்திச் செல்லும் அப்படகுகள், கீழே ஓடையில் செல்லும் தன் படகுகளுக்குப் போட்டியாக மிதந்துபோவதாகநினைத்துக்கொள்கிறது.போட்டியில் தன் படகுகள் வெற்றிபெற வேண்டும் என விரும்புகிறது. இரவில் உறங்கும்போது கூட அதே நினைவில் உறங்குகிறது அக்குழந்தை. இரவில் காணும் கனவிலும் படகுகள் மிதந்துசெல்லும் காட்சியே விரிகிறது. அந்தப் படகில் தேவதைகள் பயணம் செல்கிறார்கள். கனவுகள் நிறைந்த கூடைகளும் அதே படகில் அவர்களோடு செல்கின்றன.

புத்தகத்தைப் படித்து முடித்ததும் ஏறத்தாழ அரைநூற்றாண்டுக்கு முன்னால் அக்கவிதைகளைப் படித்த நினைவுகளும் கனவுகளும் விஸ்வரூபமெடுத்து நெஞ்சில் மோதித் தளும்பின. இறந்தகாலத்துக்கும் நிகழ்காலத்துக்கும்இடையில்மனம் ஊசலாடியபடி இருக்க, தாகூர் தீட்டியிருக்கும் குழந்தைச் சித்திரம் மட்டுமன்றி, அக்கணம் வரைக்கும் எனக்குப் பார்க்கக் கிடைத்த எல்லாக் குழந்தைகளின் சித்திரங்களும் ஒருசேர அலைமோதத் தொடங்கின. ●

**பாவண்ணன்** <paavannan@hotmail.com>

# ஆணுக்கும் பெண்ணுக்கும் நிறைய வித்தியாசங்கள் இருந்தாலும் மனதளவில் இருவரும் ஒன்றுதான்!

ஜேவியேர் மரியாஸ்
தமிழில்: ஜெகநாத் நடராஜன்

ஜேவியேர் மரியாஸ் பரவலாக அறியப்பட்ட சமகால ஸ்பெயின் நாட்டு எழுத்தாளர். ஜேவியேர், தன் மிகச் சிறிய வயதிலேயே புனைகதைகளை எழுத ஆரம்பித்து விட்டார். 'The Life and Death of Marcelino Iturriaga', 'While The Women Are Sleeping' ஆகியவை அவரது 14ஆவது வயதில் எழுதப்பட்டது. அதன் பிறகு மாட்ரிட் கம்ப்ளூட்டன்ஸ் பல்கலைக்கழகத்தில் பயின்றபோது தாமஸ் பிரவுண், லாரன்ஸ் ஸ்டெர்ன், வாலஸ் ஸ்டீவன்ஸ் உள்ளிட்ட பலரது படைப்புகளை மொழியாக்கம் செய்தார். கட்டுப்பாடுகளற்ற, ஆன்மீகமயமான இத்தகையோர் எழுத்துக்களின் சாயல்கள் பின்னாட்களில் எழுதப்பட்ட 'Your Face Tomorrow' என்ற மூன்று பாகங்கள் கொண்ட ஜேவியேர் மரியாஸின் சிறந்த படைப்புக்குப் பின்புலமாக இருந்தன. 'புருஸ்டியன்' (Proustian) எனப்படும் கடந்த காலமும் நிகழ்காலமும் இணைந்து சிதையும் ஒற்றன் வகை நாவலான இது, 1000 பக்கங்களில் இறுக்கமான சொல்லாடல்களைக் கொண்டது.



புனைவின் சாத்தியமற்ற தன்மைகளைச் சாத்தியமாகவும், உண்மைக்கும் வரலாற்றிற்கும் நிகழ்காலத்திற்கும் உரிய தொடர்புகளை முன்னிறுத்துவதிலும், மொழிபெயர்ப்பின் சாத்தியமின்மையைத் தாண்டியதுமான கூறுகள் ஜேவியேர் படைப்புகளை நிரவியிருந்தன. ஜேவியேரின் 'All Souls' ஸ்பானீஷ் இலக்கியத்தின் போக்குகள் குறித்த நாவலாக ஆக்ஸ்போர்ட் பல்கலைக் கழகத்தில் இடம் பெற்றிருக்கிறது. 80களில் இரண்டு ஆண்டுகள் அவர் மொழிபெயர்ப்பு பற்றி பயிற்றுவிக்கவும் செய்திருக்கிறார்.

இது 'The White Review' தளத்திற்கு ஜேவியேர் மரியாஸ் அளித்த நேர்காணலின் மொழிபெயர்ப்பு..

*அமெரிக்காவிலும் ஸ்பெயினிலும் கழிந்த உங்கள் குழந்தைப் பருவத்தைப் பற்றிச் சொல்ல முடியுமா?*

*நான் அமெரிக்காவில் இரண்டு காலகட்டங்களில் இருந்திருக்கிறேன். முதல் காலகட்டத்தைக் கணக்கிலெடுக்க முடியாது. நான் மாட்ரீட்டில் 1951ஆம் ஆண்டு பிறந்தேன். அப்போது என் அப்பாவை அமெரிக்கக் கல்லூரி ஒன்று வேலைக்கு அழைத்தது. என் அப்பா பேராசிரியராகவோ எழுத்தாளராகவோ இருந்திருக்கவேண்டியவர். ஆனால், அவர் இவை இரண்டிலும் ஒன்றாக இல்லை; இருக்கவும் அனுமதிக்கப்படவில்லை. தற்செயலாக நான் பிறந்த அன்று அவர் நாட்டை விட்டு வெளியேற வேண்டியிருந்தது. அவர் எப்போதும் சொல்வதைப் போல நான் பிறந்தேன்; என்னை அவர் தன் கரங்களில் ஏந்திக்கொண்டு நாட்டைவிட்டு வெளியேறிவிட்டார். நான் பிறந்த பதட்டத்தில் அவர் இல்லை. சூழ்நிலை அப்படியாக இருந்தது.*

*அதன் பிறகு நானும் என் மூத்த சகோதரரும் என் அம்மாவும் மாஸாஸெட் நகருக்குச் சென்றோம். அந்த வருடம் முழுவதும் அங்கு படித்தோம். நான்கைந்து*



வருடங்களுக்குப் பின் என் தந்தை யேல் பலகலைக் கழகத்திற்கு வேலைக்கு அழைக்கப்பட்டார். 1955-56ஆம் வருடம் முழுவதும் நியூகனெக்டிகட்டில் இருந்தோம். அதன் பின் எனது குழந்தைப் பருவம் முழுவதும் மாட்ரிட்டில்தான்.

ஆனாலும், அமெரிக்க ஆழ்நினைவுகள் உள்ளுக்குள் கிளர்ந்துகொண்டே இருந்தது. குழந்தையாக அல்லது மிகச் சிறிய வயதில் நீங்கள் வெளிநாடு ஒன்றிற்குச் செல்வதைக் கற்பனை செய்து பாருங்கள். உண்மையில் அது ஒரு கண்டுபிடித்தல்தான். நானும் என் சகோதரரும் அங்கு வாழ்ந்த வருடங்களை எண்ணுவோம். அதைத் தவற விடுவதை உணர்வோம். எப்போது அமெரிக்கா செல்லப் போகிறோம் என்று கேட்போம். உண்மையில் அங்கு சிறப்பான சில விஷயங்கள் இருந்தன. அவை ஸ்பெயினில் இல்லை.

மற்றபடி வழக்கமான ஸ்பானிய குழந்தைப் பருவம்தான். கடைசி வருடம் வழக்கமான ஒன்றாக இல்லை. நாங்கள் வளர்ந்த தலைமுறை அப்படி. குறிப்பாக நான் ஆண் - பெண் இருபாலரும் ஒன்றாகப் படிக்கும் பள்ளியில் படித்தேன். ஸ்பெயினில் அந்தக் காலத்தில் அது வழக்கமான நடைமுறை இல்லை. என் சம வயதுடைய பலர் ஒரு பாலர் படிக்கும் பள்ளியில் படித்தார்கள். பெரும்பாலான பள்ளிகள் கன்னியாஸ்திரீகளாலும் பாதிரியார்களாலும் நிர்வகிக்கப்பட்டு வந்தன. அதிர்ஷ்டவசமாக நான் அங்கெல்லாம் பயிலாமல் சுதந்திரமான பள்ளியில் படித்தேன். அரசாங்க அலுவலர்கள் வரும்போது மட்டும் ஆசிரியர்கள் பரபரப்பாவார்கள். "ஓடுங்கள், பிரிந்து செல்லுங்கள்" என்பார்கள். ஆண் குழந்தைகள் அந்தப் பக்கமும் பெண் குழந்தைகள் இந்தப் பக்கமுமாக ஓடுவோம். அதிகாரிகள் நாங்கள் தனித்தனியே படிப்பதாக நினைத்துக் கொள்வார்கள்.

அதோடு ஒரு வினோதமான பழக்கம் ஸ்பெயினில் உண்டு. கால்பந்தாட்ட நடுவர்கள் எப்போதும் இரண்டு முன் பெயருடன் இருப்பார்கள். இரண்டு பெயரிலும் அவர்கள் அழைக்கப்படுவார்கள் என்பதைத் தெரிந்துகொண்டேன். உங்களுக்கு கார்சியா, கோன்சலஸ், ரோட்ரிக்ஸ் போன்ற பெயர்கள் இருந்தால் இரண்டு பெயர்களில் அழைக்கப்படுவீர்கள்; ஆனால், மரியாஸ் என்ற பெயர் இருந்தால் இரண்டு பெயர்களில் அழைப்பது அபத்தமானது. ஆனால், நடுவர்கள் இரண்டு பெயர்களையும் பயன்படுத்தினார்கள். இது 1960இலிருந்து நடைமுறையிலிருப்பதை அறிந்தேன். 'பிரைமரா லிகா'வில் பிராங்கோ என்ற நடுவர் இருந்தார். அவர் பிராங்கோ மார்டினெஸ் என்று அழைக்கப்பட்டார். ஏனெனில், பிராங்கோ போட்டியை முடித்துவிட்டார். அணியின் ஆதரவாளர்கள் பிராங்கோ மீது கோபமாக இருக்கிறார்கள் என்று செய்தி வருவதைத் தவிர்க்கவே இந்த முறையாம். என்ன அபத்தம்?

'Dominions Of The Wolf' என்ற உங்கள் நாவலில் அமெரிக்க திரைத்துறைக்கு மனம் திறந்த புகழுரை

என்று சொல்லியிருக்கிறீர்கள்.

'Dominions Of The Wolf' நாவலை நான் தெளிவற்ற மனநிலையிலும் பொறுப்பற்ற சூழலிலும் எழுதினேன். அதேபோல இன்னும் சிலவற்றையும் என் 12-13 வயதில் எழுதினேன். நான் விரும்பியவற்றை நிறைய படிக்க வேண்டும் என்பதற்காகவே எழுதினேன். நான் என்னை மிஞ்சுவதற்குச் செய்த பிரயத்தனமே அதுவன்றி வேறொன்றுமில்லை. இந்த வார்த்தை இப்போது புழக்கத்தில் இல்லை. புனிதமான வார்த்தை அது. இது போலியாக உருவாக்கப்படுவதோ, ஒன்றைப் போல இன்னொன்றைச் செய்வதோ அல்லது இலக்கிய திருட்டோ அல்ல. அற்புதமானது. நீங்கள் விரும்பும் ஒன்றைப் போல இன்னொன்றை உருவாக்கிக் கொள்ளும் பரவசம். எனக்கு வில்லியம் பிரவுண் நாவல்களையும் மஸ்கடியர் நாவல்களையும் மிகவும் பிடிக்கும். அவற்றை வாசிக்கும் போது அவை போல இன்னும் எனக்கு வேண்டும் என்று கேட்பேன்.

'Dominions Of The Wolf' நாவல் இத்தகைய ஆசைகளால் உருவாக்கப்பட்டது. பிரசுரம் செய்ய அல்ல. என் நண்பர்களிடம் கொடுத்து என்ன செய்திருக்கிறேன் பாருங்கள் என்று சிலாகிக்க மட்டுமே எழுதினேன். அது பிரசுரமாகி அதன் விமர்சனங்கள் வந்தபோது எனக்கு 19 வயது. எனக்கு இன்னும் சில விமர்சனங்கள் ஞாபகத்தில் இருக்கின்றன. சில விமர்சகர்கள் சொன்னார்கள், இந்த நாவல் கருணை மிக்கதாக இருக்கிறது என்று. நான் சொல்வேன், இதில் நாவலுக்கான யுக்திகள் இருக்கின்றன. நாவல் தன்மை, கற்பனையுலகத் தன்மை, வேகம் எல்லாம் இருக்கிறது. கூடுதலாக அல்லது குறைவாக இது விமர்சிக்கப்பட்டாலும், ஏன் இந்த ஆள் தன் உலகம் பற்றிப் பேசாமல் ஏன் இதனைப் பற்றிப் பேசுகிறான் என்ற வகையிலான கேள்விகள் நிரம்பியிருக்கின்றன. 1971 சமூக எதார்த்த நாவல்களின் காலம்.

எல்லா எழுத்தாளர்களும் கலைஞர்களும் தங்கள் படைப்புகள் பிராங்கோவின் கொடுங்கோலாட்சிக்கு எதிராக தங்கள் படைப்புகள் இருக்க வேண்டும் என்று நினைத்தார்கள். இது பெரிதும் முட்டாள்தனமானது. உண்மையில் நாவல்களால் எதையும் செய்ய முடியும். அவர்கள் மிக மோசமான சுவாரஸ்யமற்ற நாவல்களை எழுதினார்கள். அர்த்தமுள்ளவையாக அவை இருக்கலாம். ஆனால், இலக்கியப் பார்வையில் அது அப்படி அல்ல. என் தலைமுறை எழுத்தாளர்கள் அதனைச் செய்ய மாட்டார்கள். நான் எப்போதுமே ஒரு குடிமகனாக இருப்பதற்கும் எழுத்தாளனாக இருப்பதற்குமான வேறுபாட்டை உணர்ந்தே வந்திருக்கிறேன். நான் விமர்சகர்களின் குற்றச்சாட்டுக்கு ஆளாகும்போது அவர்கள் இந்த வகையில் தவறாக இருக்கிறார்கள் என்று நினைத்துக்கொள்வேன். நான் அந்தவகையில்தான் குழந்தைப் பருவ ஸ்பெயினைப் பற்றி நினைக்கும்போதும் அமெரிக்க திரைத்துறையைப் பற்றி, நாவல்கள் பற்றி, டிடெக்டிவ் நாவல்கள் பற்றி நினைப்பேன்.

டாஷியல் ஹாமெட், ஃபிட்ஸ்ஜெரால்ட், ரேமண்ட் சண்ட்லர் - இவர்களெல்லாம் துன்பம்மிக்க இவ்வுலகிலிருந்து நமக்கு விடுப்பு தருகிறார்கள். அதன் மூலம்தான் என்னை நசுக்கும் துயரங்களிலிருந்து நான் தப்பிக்க முடிந்தது. இதைப் போல 'Dominions Of The Wolf' ஒரு முரணான நாவல். நகைச்சுவை. நான் எந்தவழியில் என் சொந்த குழந்தைப் பருவ மனநிலையிலிருந்து விடுபட்டேனோ அதை எழுதியதாகப் பின்னர் நினைத்தேன். ஆனால், என் கடமையைச் செய்யாததாக விமர்சகர்கள் குறிப்பிட்டார்கள். ஒருவித உந்துதலுடன் என்னை மீறவே நான் பிரயத்தனப்பட்டேன்.

**ஸ்பானிய மொழியின் போதாமை மற்றும் மொழிபெயர்ப்பு போலவே எழுதுகிறீர்கள் என்று பொதுவாக உங்கள் மீது குற்றம்சாட்டப்படுகிறதே?**

பல வருடங்களாக நான் இந்தக் குற்றச்சாட்டுக்கு ஆளாகியிருக்கிறேன். என் இரண்டாவது நாவலிலுள்ள பிரிட்டானிய கதாபாத்திரங்கள் வடதுருவ, தென் துருவத்தில் வேலைபார்ப்பவர்கள் போலத் தெரிகிறார்கள். 1973இல் என்று நினைக்கிறேன். ஆங்கிலத்தில் அது வெளியானது. என் முதல் இரண்டு நாவல்கள் ஸ்பானிய வாழ்வு பற்றியதோ, ஸ்பானிய மக்களைப் பற்றியதோ, ஸ்பானிய அரசியலைப் பற்றியதோ இல்லை. அதனாலேயே சிலர் ஒரு ஆங்கில எழுத்தாளர் ஸ்பானிய மொழியில் எழுதுகிறார் என்று சொல்லத் தொடங்கிவிட்டார்கள். ஸ்பானிய மொழியின் தாத்பரியங்களோடு என் வார்த்தைகள் இல்லை என்றும் சொன்னார்கள். அது உண்மைதான். நான் என் நடையில் அர்த்த விஸ்தரிப்புமிக்க தன்மையைப் பயன்படுத்துகிறேன். அது என் ஆங்கில அறிவு காரணமாக மட்டும் இல்லை. அதனாலேயே எனக்கு வெளிநாட்டு எழுத்தாளன் என்ற முத்திரை.

இது ஒரு தரக்குறைவான செயல். என் வாழ்நாளில் நான் இதுபோன்ற பல முத்திரைகளை ஒட்டப்பட்டு வந்திருக்கிறேன். கடைசியாக நல்ல எழுத்தாளர் என்று ஏற்றுக்கொள்ளப் பட்டேன். ஆனால், அதீத மூளைக்காரன் அல்லது மூளைக் குறைபாடுள்ளவன், இறுக்கமாக எழுதுபவன். என் கதைகள் அப்படியல்ல. உணர்ச்சிவயமாகவோ கவிதை நயமாகவோதான் இருக்கும் என்று நான் சொல்வேன்.

கொஞ்சம் கழித்து நான் பெண்களுக்காக எழுதுபவன் என்றார்கள். அதுவும் மோசமான குற்றச்சாட்டுதான். அதில் உண்மையே இல்லை. எனக்கு பலதரப்பட்ட வாசகர்கள் இருக்கிறார்கள் அதில் பெண் வாசகர்கள் அதிகம். ஏனெனில், பெண்கள்தான் அதிகம் படிக்கிறார்கள்.

பிடிக்காதவர்கள் எதாவது முத்திரையை ஒட்டுகிறார்கள். ஒன்று உதிந்து விழுந்ததும் இன்னொன்றை ஒட்டுகிறார்கள்; ஏனென்று தெரியவில்லை. என் சொந்த நாட்டில் ஆதரவளிப்பதற்குப் பதிலாக என் சக மனிதர்கள் எதிர்ப்பையே காட்டினார்கள். எல்லா விமர்சகர்களும் என்னை குறை சொல்லவில்லை, சிலர்,

**மொழிபெயர்ப்பு எந்த வகையில் சொந்தமாக எழுதும்போது ஆதிக்கம் செலுத்தியது?**

நான் 'ஆம்' என்றுதான் சொல்ல வேண்டும். நீங்கள் மொழிபெயர்ப்பாளராகவும் அதேசமயம் எழுத்தாளராகவும் இருக்கும் பட்சத்தில் நீங்கள் சிறப்பான விஷயத்தைச் செய்ய முடியும். நான் மொழிபெயர்த்ததெல்லாம் மிகச் சிறப்பானவை.



நான் ஆக்ஸ்போர்டில், மாட்ரீட்டில் மொழிபெயர்ப்பு வகுப்புகள் எடுக்கும் போது, எல்லோரும் மொழிபெயர்ப்பது எப்படி என்று தமக்குத் தெரியும் என்று நினைத்துக்கொள்கிறார்கள். 'ஐ லவ் யூ' என்ற பதத்தை எடுத்துக்கொள்ளுங்கள். உங்களுக்குத் தெரியும் அனைவரும் அவரவர் சட்டைகளில் கூட அதனை எழுதி வைத்திருக்கிறார்கள். அதற்கு ஆறு அல்லது ஏழு மிக நுட்பமான வித்தியாசங்களைக் கொண்ட வார்த்தைகள் ஸ்பானிஷில் இருக்கின்றன. மிகப் பொதுவான வழக்குச் சொல், எல்லோருக்கும் பொதுவான வழக்குச் சொல், சிறு சிறு வித்தியாசங்களோடு எல்லா மொழிகளிலும் இருக்கின்றன. உதாரணமாக மரணம் என்று பொருள்படும் 'Muerte' என்ற வார்த்தை ஜெர்மானிய மொழிக்குப் பொருந்தி வராது. ஏனெனில், மரணம் என்பது அங்கு ஆண்பால். ஆனால், பிரெஞ்சிலோ இத்தாலியிலோ அது பெண்பால். ஜெர்மானிய ஓவியங்களிலும் மரணம் பற்றிய அச்சுப் பொறிப்புகளிலும் ஆண் உருவங்களே இடம் பெற்றிருக்கின்றன. தென் ஐரோப்பாவிலோ அது வயது முதிர்ந்த பெண் உருவம். பொதுவான எல்லா விஷயங்களையும் விட, வாழ்வை விட மரணம் மிகப் பொதுவானது. நீங்கள் அர்த்தப்பூர்வமாக மொழிபெயர்க்க வேண்டும் இவற்றையெல்லாம் மனதில் வைத்துக்கொண்டு, தேர்ந்தெடுத்து எழுதித் திருத்தி, மீண்டும் எழுத வேண்டும்.

போர்ஹேஸ் ஒருமுறை சொன்னார்: "மொழிபெயர்ப்பு என்பது மெல்ல மெல்ல நிகழும் ஒரு அற்புதம். பூமியில் நிகழும் மகத்தானவற்றில் ஒன்று. ஒரு வார்த்தை அவை உருவாக்கப்பட்ட எல்லாவற்றையும் இழந்து, மீண்டும் அதாவதாகவே, அது படைக்கப்பட்ட மொழியினுடையதாகவே இருப்பது. இன்னும் அது அதுவாகவே இருப்பது. நீங்கள் அது அதுவாக இருக்கிறது என்று சொல்கிறீர்கள். அது கவிதை என்கிற பட்சத்தில் அதன் சந்தம், ஓசை, மோனை - அது கவிதையாக இருக்கும் பட்சத்தில் அதன் எதுகை மோனை, அதன் நீட்டல் அளவு எல்லாவற்றிலும் அவை அப்படியே இருந்தால் அது மிக அற்புதம்தான்.

பிரவுண் தொடங்கி ஸ்டெர்ன்; கான்ராட் முதல் தாமஸ் ஹார்டி வரை; ஃபாக்னர், நபோகோவ், ஸ்டீவன்ஸ், ஆடன், ஆஷ்பெரி, ஸ்டீவன்சன் ஆகியோரின் கவிதை; யீட்ஸ், டென்னிசனின் உரைநடை என்று சிறப்பான எழுத்தாளர்கள் மற்றும் கவிஞர்கள். இந்த மொழிபெயர்ப்பின் போது நீங்கள் விரும்புகிறீர்களோ இல்லையோ அந்த ஆதிக்கத்தைத் தவிர்த்துவிட முடியாது. நீங்கள் நீண்ட நேரம் அந்தப் பணியைச் செய்யும்போது அது உங்களைப் பாதிக்கும்.

பலதடவை சொல்லப்பட்ட மாதிரி மொழிபெயர்ப்பாளன் என்பவன் ஒரு சிறப்பான வாசகன். அதே சமயம் சிறப்பான எழுத்தாளன். நீங்கள் மிகச் சிறப்பாக எழுதப்பட்ட ஒரு படைப்பாளியின் படைப்பை இன்னொரு மொழியில் மீண்டும் எழுதுகிறீர்கள். அந்த வார்த்தைகள் உங்களுடையது. நீங்கள் நேர்மையாக அதைச் செய்ய விரும்பும்போது உங்கள் தேர்வில் கவனமாக இருக்க வேண்டும், எப்போதும்.

நான் மொழிபெயர்த்த படைப்பாளிகளிடமிருந்து என் படைப்புகளுக்கான தெளிவைப் பெற்றிருக்கிறேன். ஸ்டெர்ன், சர் தாமஸ் பிரவுண் படைப்புகள் என் படைப்புகளில் தாக்கத்தை ஏற்படுத்தியவை என்று நான் உணர்ந்திருக்கிறேன்.

நீங்கள் வார்த்தைகளைப் புதிதாக உருவாக்கி, மற்றவர்கள் போல காற்புள்ளிகளற்று, அடிகடந்து நீளும் வார்த்தைகளை அமைக்கிறீர்கள் என்று

**குறிப்பிடப்படுகிறீர்கள். அந்த வாக்கிய உருவாக்கம் பற்றிச் சொல்லுங்கள்.**

*உரைநடையில் வேகம் மட்டும் ஒத்திசைவை அமைக்க; எந்த இலக்கியப் பணிகளிலும் இதைச் செய்வது எனக்கு முக்கியமாகப்படுகிறது. நான் எழுதும் போது இசைக் கோர்வை போல அமைவதை என்னால் தவிர்க்க வியலாது. எப்படிச் சொன்னாலும், ஒருவகையில் இது உன்னிப்பாகக் கவனிக்கப்பட்டதோ அல்லது குறிப்பிட்டுச்செய்ய வேண்டியதோ அல்லாமல், அதன் போக்கில் அதன் தன்மையுணர்ந்து செய்வது. சில சமயங்களில் வலுக்கட்டாயமாகக் காற்புள்ளிகள் இட்டு, வார்த்தைகளின் லயத்திற்கு இடைஞ்சல் இல்லாமலிருக்க விரும்புவேன். சில சமயங்களில் காற்புள்ளி இடுவதற்குப் பதிலாக முற்றுப் புள்ளி இட்டுவிடுவேன். நீங்கள் அடுத்ததாகத் தொடங்கும், ஆம், ஆனால், என்று தொடங்கும் வார்த்தைகள்தான் சரளமான உரைநடைக்கு இடைகல்லாக இருக்கும். லத்தீன் மொழியில் ஆங்கிலத்தில் சொல்வதுபோல வார்த்தைகளில் விவரிக்கும் ஐந்தாம் வேற்றுமை உருபு கிடையாது. நீங்கள் அதனோடு இயங்க வேண்டுமானால் பெயர்ச்சொல் என்பதை பெயரச்சமாகவே சில சமயங்களில் உபயோகப்படுத்த வேண்டும்.*

*நான் வரிகளை அமைக்கும் போது அவற்றைப் பிரிக்கக் காற்புள்ளிகளை அமைப்பதுண்டு. அவை தானாக நிகழ்வதுதான். நான் அதை வேண்டுமென்றே அமைப்பதாக கருதுவார்களானால் நான் வழக்கமாக அதைச் செய்வதில்லை. நான் ஒவ்வொரு பக்கத்திற்கும் கடுமையாக உழைக்கிறேன். நான் என் நாவல்களுக்கான இரண்டு வடிவங்களை எழுதுவதில்லை. ஆனால், ஒவ்வொரு பக்கத்தையும் மாற்றி எழுதுவேன். அப்படி எழுதி முடித்துவிட்டால் அவை நேராக அச்சுக்குச் சென்றுவிடும். ஏன் என்றால் மற்றவர்கள் எழுதும் / மொழிபெயர்க்கும் வண்ணம் இருக்காது. கவிஞர்கள் செய்வதைப் போல நான் அளவு பற்றி யோசிக்க மாட்டேன். சிலசமயம் அந்தப் பொருளை இன்னும் அழுந்தச்சொல்லக்கூடிய இன்னொரு வார்த்தைக்காகப் போராடுவேன். அதனால், வினோதமான வார்த்தைகளையும் வரிகளையும் உருவாக்க வேண்டியிருக்கிறது. மொழிபெயர்ப்பில் அவை காணாமல் போகின்றன என்று சொல்லப்படுவதுண்டு. ஆனால், உண்மையில் அது அப்படி அல்ல.*

**உரைநடை இசைத்தன்மை கொண்டதாக மாறும் வாய்ப்பிருக்கிறது என்று நினைக்கிறீர்களா? இசையும் இலக்கியமும் அதனதன் தன்மைகளில் ஒன்றோடொன்று ஒப்பிடத்தக்கதா?**

*ஒப்பிடத்தக்கது என்று சொல்ல விரும்புகிறேன். ஆனால், அப்படி இருப்பதாக நான் நினைக்கவில்லை. இசை, கலைகளில் முதன்மையானது என்று நான் சொல்லியிருக்கிறேன். இசை உருவாக்கும் அதே தன்மையை எழுத்தில் படைக்க விரும்பியிருக்கிறேன். நிச்சயமாக இது எப்போதும் முரண்பாடானதுதான். நீங்கள் எதாவது பரிசோதனை செய்யாவிட்டாலொழிய சொற்களுக்குள் அர்த்தம் எப்போதும் இருந்து கொண்டுதான் இருக்கிறது. இசை, அற்புதமான விஷயமாக இருக்கிறது. ஆனால், இசைக் கோர்வை மர்மமானவையாக இருக்கிறது. வார்த்தையாக இல்லாவிட்டாலும் அது எப்படி மகிழ்ச்சியாக, துக்கமாக, சோகமாக அல்லது ஏதோ ஒரு உணர்வை எப்படி உருவாக்குகிறது. இலக்கியத்தில் பயன்படுத்தப்படும் வார்த்தைகள் அர்த்தங்களால் பொலிவிழக்கின்றன. நீங்கள் சொல்ல வருவதன் தாளமும் லயமும் மிக முக்கியமானதாகிறது.*

*நீங்கள் ஒரு எழுத்தாளர் என்பதை எப்படி விளக்குவீர்கள் என்று என்னிடம் சில சமயங்களில் கேட்கப்படுவதுண்டு. ஒருவர் உங்களைப் படிப்பதும் பாராட்டுவதும் எளிதான ஒன்றல்ல. உங்களை நிறைய பேர் படிப்பதும் அப்படித்தான். உலகெங்கிலும் ஏழு மில்லியன் பிரதிகளுக்கும் மேலாக எனது புத்தகங்கள் விற்பனையாகியிருக்கின்றன. என் போன்ற படைப்பாளிக்கு அது அதிகமானதுதான். அதற்கு என்ன காரணம் என்று சரியாகச் சொல்லத் தெரியவில்லை. ஆனால், எனது எண்ணங்களும் என் எழுத்து நடையும் கவர்ந்து மயக்கவோ வசீகரிக்கவோ அல்லது இது இல்லாமல் ஏதோ ஒன்றையோ செய்திருக்கலாம். இது ஸ்பெயினைப் பற்றிய என் கணிப்பு மட்டுமே. என் மொழிபெயர்ப்பு அனுபவத்துடன் கூடியதாக இருக்கலாம். சில எழுத்தாளர்கள் தொற்று போல, சிறந்த அர்த்தமயமான சொற்களால் உங்களை பாதிக்கக் கூடியவர்கள்.*

*கான்ராட், ஸ்டெர்ன், பிரவுண் - மூவருமே ஒவ்வொரு வகையிலும் கடினமானவர்கள். எனினும் அவர்களின் உரைநடையால் பாதிப்பிற்குள்ளாக்கப்பட வைப்பவர்கள். அவை அலைகள் போல உங்களை உள்ளிழுத்து முன்னும் பின்னும் மேலும் கீழும் அலைக்கழிப்பவை. இத்தகைய காரணங்களால் என் புத்தகங்கள் வெற்று மொழிகளிலும் பாராட்டப்பட்டிருக்கலாம். நான் மொழிபெயர்ப்பாளர்களைக் கறைப்படுத்தும் எழுத்தாளர்.*

**கதைகளின் அடிப்படையிலான நாவல்கள் உங்களுடையதில்லை என்று சொல்லியிருக்கிறீர்கள். அதன் தனித்துவமான பாணியை முன்பே திட்டமிடுவீர்களா? அவற்றைத் தனித்துவமான நவீனமான வித்தியாசமான ஒன்றாகப் பார்ப்பீர்களா?**

*இல்லை அவை தொடர்ச்சியாக வருவதுதான். 1986இலிருந்து நான் எப்போதுமே ஒரு நபர் தன்னைப் பற்றிச் சொல்லும் நடையையே பயன்படுத்தி வந்திருக்கிறேன். என் கதை சொல்லிகள் உறவினரைப் போன்றவர்கள். என்னுடன் ஒத்துப் போகிறவர்கள். ஆனால், அவர்கள் ஒரே பாத்திரம் அல்ல. வேறு வேறு பெயர்களைக் கொண்டவர்கள்.* 'The Infatuations' *என்ற என் நாவலில் கதை சொல்பவர் ஒரு பெண்ணாக இருந்தார். அதுதான் எனக்கு பிரச்சினை. நாவலின் கடைசியில் அவள் எல்லோருக்கும் தெரிந்த உறவினர் போல ஆகிப்போனாள். நான் அவள் குரலை வேறொன்றாகக் காட்ட முயலவில்லை. அது என் குரல் அல்ல; ஆனால், அந்தக் கதை சொல்லி நான்தான்.*

*நான் என் பாணியில் மாற்றங்களைச் செய்ய விரும்பவில்லை. தன்னைப் பற்றியே திரும்பத்திரும்ப சொல்லிக் கொண்டிருக்கும் எழுத்தாளர் அல்ல என்று சொல்லிக்கொள்ளும் வகையைச் சேர்ந்தவன் அல்ல நான். ஏனெனில், நான் அதே நூலை மீண்டும் எழுதப்*



போவதில்லை. அது வலுக்கட்டாயமாகப் படிக்க வைப்பது போன்றது. அபத்தமானது. எல்லோரும் நல்ல கதையைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். இண்டர்நெட்டில் அறியப்படாத கதை என்று ஒன்று இல்லை. எல்லாமும் யாராலோ பயன்படுத்தப்பட்டதாகவே இருக்கிறது. கதை தேடுவது எனக்கு அபத்தமாகவே படுகிறது. என் வாழ்வில் நடந்த விஷயங்களை எழுதவே நான் விரும்புகிறேன். நான் என் வாழ்வில் நினைத்தவை, நான் கவலைப்படும் விஷயங்களை எழுதியிருக்கிறேன். அவை உலகளாவிய அளவில் பொதுவானவைதான். ரகசியம், துரோகம், நம்பிக்கை, காதல், நட்பு, திருமணம், மரணம் இவற்றைப் பற்றியே நான் கவலைகொள்கிறேன். இலக்கியத்திற்கான விஷயங்களாக இல்லை. வாழ்க்கைக்கான விஷயங்களாக. நான் எதையும் தேடுபவனாகவோ திட்டமிடுபவனாகவோ இல்லை.

நிச்சயமாக என் சில நாவல்கள் உண்மையான சம்பவங்களுடன் தொடர்புடையவை. அவை சொல்லப்பட வேண்டும் என்ற எண்ணத்தை எனக்குள் உருவாக்குபவை. கூடவோ குறைச்சலாகவோ அவர்கள் விழிப்புடனிருந்தாலும் எல்லோரையும் பாதித்திருப்பவை. நீங்கள் என் நாவல்களைப் படிக்கும்போது பல இடங்களில் நான் வரைபடத்தை வைத்துக்கொண்டு எழுதவில்லை என்பதையும் மாறாக திசைக்காட்டியைப் போல ஒன்றைக் கொண்டு எழுதியிருப்பதையும் உணர்ந்திருப்பீர்கள்.

'The Infatuations' நாவலை ஒரு பெண்கதை சொல்லி மூலம் சொல்லும்போது எத்தகைய சுதந்திரத்தை அல்லது கட்டுப்பாடைக் கொண்டிருந்தீர்கள்?

ஆரம்பத்தில் கூச்சமாக இருந்தது. அடிக்கடி என் நாவல்களில் ஆண் கதை சொல்லிகள் செய்யும் விஷயங்களைப் பெண்ணாக இருப்பதால் செய்ய மாட்டாள் என்று நினைத்தேன். ஆனால், சில நகைச்சுவை துணுக்குகள், பாத்திர முரண்பாடுகளை என் ஆண் கதை சொல்லிகள் செய்வது போல அவரும் செய்வது போன்று தோன்றலாம். அவர் பெண் உடை அணிந்திருக்கும் ஆண் அல்ல. ஆணுக்கும் பெண்ணுக்கும் நிறைய வித்தியாசங்கள் இருந்தாலும் மனதளவில் இருவரும் ஒன்றுதான் என்ற முடிவிற்கு வந்தேன். என் வாழ்வில் நான் பல பெண்களைச் சந்தித்திருக்கிறேன். அவர்கள் ஆண்களைப் போன்ற மனநிலையில்தான் இருந்தார்கள். முட்டாள்தனம் கொண்ட புத்திசாலி ஆண்களும் அதே போன்ற பெண்களும்.

மூன்று விஷயங்களில் என் கதை சொல்லிகள் செய்வார்கள். சொல்லல், கவனித்தல் மற்றும் பிரதிபலித்தல். ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையே பெரிய வித்தியாசத்தை நான் பார்க்கவில்லை. அதனால்தான் ஏன் ஒரு பெண்கதை சொல்லி நகைச்சுவைகளை உதிர்க்கவும் முரண்பாடுகளைக் கொண்டவளாகவும் இருக்கக் கூடாது என்று முடிவு செய்தேன். அது முடிவில் பலரிடம் மிகுந்த வரவேற்பைப்பெற்றது. குறிப்பாகப் பெண்களிடம். அந்த நாவலைப் படித்த பெண்கள் மன அழுத்தமில்லாத

(தொடர்ச்சி 37ஆம் பக்கம்)

# முள்ளிவாய்க்கால்

**இளங்கோ**

**ஓவியம்: சேகர்**

*1.*

நான்கொழும்பில் போய் இறங்கியபோது வெயில் எரித்துக்கொண்டிருந்தது. பகல் பொழுதில் வெளியில் போகவும் எரிச்சலாக இருந்தது. இந்தப் பயணத்தின்போது அவளை எப்படியாகினும் தவறாது சந்தித்துவிடவேண்டுமென நினைத்திருந்தேன். அவள் முள்ளிவாய்க்காலுக்குள் கடைசிவரை இருந்து தப்பி வந்தவள். கொழும்பிலும் தனது ஊரிலுமாக மாறிமாறி இப்போது வாழ்ந்துகொண்டிருந்தாள்.

அவளை, அவளின் ஊரில் சென்று சந்தித்தல் அவ்வளவு எளிதில்லை என்பதால், எப்படியேனும் கொழும்பில் சந்தித்தால் நல்லது என்று தோன்றியது. நான் எழுதுவதைக் கிட்டத்தட்ட ஏழெட்டு வருடங்களாக வாசித்துக் கொண்டிருக்கின்றவள். ஆனால், அண்மையில்தான் சோசியல்மீடியா மூலம் தொடர்புகொண்டு இருவரும் ஒருவருக்கொருவர் அறிமுகமாயிருந்தோம்.

காலையில் பக்கத்துக் கடையில் வாங்கி வந்திருந்த ‘சண்டேடைம்ஸ்’-ஐ விரித்துப் பார்த்தபோது, கொழும்பில் ஓரிடத்தில் ஜியோப்ஃரி பாபாவினது ஆர்க்கிடெக் கண்காட்சி நடக்கின்றது என்பதைப் பார்த்தேன். நாம் சந்திப்பதாக இருந்தால் இந்தக் கண்காட்சியில் சந்திப்போமா என அவளிடம் கேட்டேன். அவளுக்குக் கொடுப்பதற்கென சென்னையில் வாங்கிய சில புத்தகங்களையும் கொழும்பு வெம்மைக்குள் இதோ உருகப்போகின்றேன் என்று சவால் விட்டுக்கொண்டிருந்த சில சொக்கிலெட்டுக்களையும் கூடவே எடுத்துக்கொண்டு போனேன்.



ஜியோப்ஃரி பாவாவினால் வடிவமைக்கப்பட்டிருந்த கந்தளகமா ஹொட்டலில் சிலவருடங்களுக்கு முன்னர் போய்த் தங்கியிருக்கின்றேன். ஒருபக்கம் வாவியும் இன்னொருபுறம் மலையுமென காட்டுக்குள் அமைந்த அந்த விடுதி, ஓர் அற்புதமான அனுபவத்தைத் தந்திருந்தது. அதை வடிவமைத்தவர் இதே ஜியோப்ஃரி பாவா என்பதால் கண்காட்சிக்குச் செல்வது உற்சாகமாகஇருந்தது. ரொறொண்டோவில் எல்லா நிகழ்வுகளுக்கும் போவதுபோல, நான் சொன்ன நேரத்துக்குப் பிந்திச் சென்றபோதும்,அவள் புன்னகையோடு வரவேற்றாள்.அனல் வெயிலால் வியர்வை வழிய வழியச் சென்ற எனக்கு அது சற்றுக் குளிர்மையைத் தந்திருந்தது.

மயில்தோகையின் வர்ணத்தில் சுடிதார் அணிந்திருந்தாள். சுருள் சுருளான கூந்தல் அவள் தோள்முழுதும் அலைபாய்ந்தபடி இருந்தது. இடது காதும் கன்னமும் சந்திக்கும் இடத்தில் ஒரு மச்சம் மறைந்தும் மறையாதமாதிரி விளையாட்டுக் காட்டிக் கொண்டிருந்தது, இடதுபக்கம் அணிந்திருந்த மூக்குத்தி முகத்துக்கு நல்ல களையைக் கொடுத்திருந்தது.

இப்போதுதான் அறிமுகமாகின்றோம் என்று உணராவண்ணம் ஏற்கனவே பலமுறை சந்தித்த நண்பர்களைப் போல இயல்பாகப் பேசத் தொடங்கினோம். கண்காட்சிக்குள், நின்று நிதானித்துப் பார்ப்பதற்கு அவ்வளவாக ஏதும் இருக்கவில்லை. நேரமும் மதியத்தைத் தாண்டிவிட்டதால் அருகிலிருந்த ஒரு கஃபேயில் மதியவுணவைச் சாப்பிடுவோம் என வெளியில் நடக்கத் தொடங்கினோம். முதலில் தெரிந்தது பெப்பர்மின்ட் கஃபே. அதன் சூழல் இரம்மியமாக இருந்தாலும் அண்மையில்தான் அங்கு வேலையில் இருக்கும் பரிசாரகர்கள் தமிழில் வாடிக்கையாளர்களுடன் பேசக்கூடாது என்ற கட்டளையை அதன் நிர்வாகம் விதித்து, பெரும்சர்ச்சைக்குள் சிக்கியிருந்ததும் நினைவுக்கு வந்தது. இந்த இடம் வேண்டாமென விலத்தி, சற்றுத் தொலைவிலிருந்த ஜாஸ்மின் கஃபேயை நோக்கி நடந்தோம்.

மதியம் என்பதாலோ அல்லது வேலை நாளென்பதாலோ சனம் அவ்வளவாக இல்லாமல் உணவகம் அமைதியாக இருந்தது. உணவுக்கான ஓடரைக் கொடுத்தபின் எதையோ சொல்ல விரும்புகின்றவள் போலவும்; ஆனால், ஏதோ அதைத் தடுப்பது போலவும் அவள் தவிப்பதும் தெரிந்தது. இறுதியில் அவள் ‘இது எனது முதல் காதல் கதை. காதல் என்று கூடச் சொல்லலாமோ தெரியாது. உன்னோடு இதைப் பகிர்ந்துகொள்ளவேண்டுமெனத் தோன்றுகின்றது’ என்றாள்.

‘எந்த இரகசியம் என்றாலும் யோசித்து என்னோடு பகிருங்கள். பிறகு நான் இதை வேறொரு இடத்தில் இன்னொருவருக்கு நிகழ்ந்ததுபோல எழுதிவிடும்



ஆபத்து இருக்கின்றது' என்றேன். 'அதனால்தான் உனக்குச் சொல்கின்றேன். உன்னிடம் சொல்வதால் இதை எழுதிவிடுவாய் என்பதால் அல்ல, இப்படிச் சொல்வதன் மூலம் என்னை நான் கடந்தகாலத் திலிருந்து விடுவித்துக்கொள்ள விரும்புவதால் கூட இருக்கலாம்' என்றாள்.

*2.*

'நான், எங்கள் ஊரில் மேலே தொடர்ந்து படிப்பதற்கு நல்ல பாடசாலை இல்லையென்பதால் தூரத்திலிருந்த பாடசாலைக்குப் போகத் தொடங்கியிருந்த காலம். அந்தப் பொழுதில்தான் அவனைச் சந்தித்தேன். என்னைவிட மூன்று வயது கூடியவன். எங்கள் பாடசாலையில் உயர்தரம் படித்துக்கொண்டிருந்தான். பாடசாலையில் அவ்வளவு கதைக்க முடியாதபோதும் நான் ரியூசனுக்குப் போகும்போதெல்லாம் என்னை ரியூசனிலிருந்து மூன்று கிலோமீற்றர்கள் தூரத்திலிருந்த வீடுவரை, சைக்கிளில் பின்தொடர்ந்து வந்துகொண்டேயிருப்பான்.

எனக்கும் அவ்வளவு முதிராத பருவம். கொஞ்சம் நாட்கள் செல்ல, அவன் பேசக்கூடிய அளவுக்கு என்னோடு நெருக்கமாகிவிட்டிருந்தான். நான் ரியூசன் முடிந்து சைக்கிளில் சமாந்தரமாய் வரும் அவனோடு வரும் வழியெங்கும் நிறையக் கதைத்துக்கொண்டிருந்தேன். அவ்வப்போது எனது சைக்கிள் கூடைக்குள் பூங்கொத்துகளை நிரப்பி எனக்குச் சின்னச்சின்ன வியப்புக்களையும் தந்தான். அதைக் காதல் என்று சொல்லமுடியாது. ஆனால், அவனோடு கதைத்துக்கொண்டிருப்பது எனக்குப் பிடித்திருந்தது. அதிலும் அவனது மற்ற நண்பர்களெல்லாம் கிரிக்கெட் விளையாட மைதானம் போகும்போது, அவர்களுக்கு ஏதாவது காரணத்தைச் சொல்லி, அவன் என்னோடு சைக்கிள் உழக்கியபடி கூடவே வந்துகொண்டிருந்தது எனக்கும் புதுவித அனுபவத்தைத் தந்துகொண்டிருந்தது.

இப்படி இருந்த காலத்தில்தான் யுத்தம் மீண்டும் தீவிரமாகத் தொடங்கியது. அவனின் வீட்டில் மூன்று ஆண்கள்; மூத்தவன் இவன்தான்.வீட்டிலிருந்து ஒருவர் கட்டாயம் இயக்கத்தில் சேரவேண்டுமென வீடு வீடாக இயக்கம் பிரச்சாரம் செய்து கொண்டிருந்தது. வீட்டிலிருந்து இவனைத்தான் இயக்கத்துப் போவதற்கு வீட்டுக்காரர் தேர்ந்தெடுத்திருந்தனர். பாடசாலையில் இவன் ஒரளவு விளையாட்டில் பிரபல்யம்., அவன் இயக்கத்துக்குப் போகப்போகும் செய்தி அறிந்து சோகத்தில் ஆழ்ந்ததுபோல இரண்டு மூன்றுநாட்களுக்கு மழையும் இடைவிடாது பெய்தது. அத்தோடு இயக்கத்துப் போனவர்கள் மரணப்பேழைகளில் விழிமூடியபடி உடனேயே திரும்பிக்கொண்டிருந்த கொடுங்காலமாகவும் அது இருந்தது. இவன் இயக்கத்துக்குப் போகின்றான் என்பதை அறிந்தவுடன் நான் அன்று முழுதும் மழையை விடக்கூடுதலாக அழுதபடியே இருந்தேன். ஏனோ தெரியாது என்னுடலிருந்து ஒரு பகுதி

இல்லாமற்போவது போன்ற அவதியை நான் முதன்முதலில் உணரத்தொடங்கினேன்.

இயக்கத்துக்குப் போகும் நாளுக்கு முதல்நாள் அவன் எனக்கு ஒரு ஆட்டோகிராப் புத்தகத்தைத் தந்தான். அது சிவப்பு நிறத்தாலானது. அதனை மூடிப்பூட்டுவதற்கு என்று பூட்டும் திறப்பும் இருந்தது. அவன் அதைத் தந்துவிட்டு நாளை நான் இயக்கத்துப் போனபிறகுதான் நீ இதைத் திறந்து பார்க்கவேண்டுமெனச் சொன்னான்.

அடுத்தநாள், அவனும் அவன் வகுப்பைச் சேர்ந்த அவனது சில நண்பர்களும் இயக்கத்துக்குப் போய்விட்டார்கள் என்ற துயர செய்தியோடுதான் அன்றைய காலையே தொடங்கியது. பாடசாலைக்குப் போனபோது என்னால் எந்தப் பாடத்திலும் கவனம் செலுத்த முடியவில்லை. அவனை நினைக்க நினைக்க சடுதி சடுதியாக விம்மலோடு அழுகை பீறிட்டெழத் தொடங்கியது. யூனிபோர்ம் வியர்வையால் நனைவதுமாதிரி, நான் அன்று கண்ணீரால் நனைந்திருந்தேன்.

பாடசாலை முடிந்ததும் முடியாததுமாய் வீட்டுக்குப் போய் அவன் தந்த ஆட்டோகிராப்பை திறந்து பார்த்தேன். அந்தப் பக்கங்கள் முழுதும் காதல் வரிகளால் நிரப்பப்பட்டிருந்தன. என்னை நேசிப்பதாகவும் இந்த இறுதி யுத்தம் முடிந்ததும் என்னை மணம் முடிக்கப்போவதாகவும் எழுதியிருந்தான். இறுதியில் இரத்தத்தால் 'ஐ லவ் யூ' என்றும் எழுதியிருந்தான். 'எமது மண் எனது இரத்தத்தைக் கேட்கின்றது. ஆனால், எனது குருதியின் முதல் துளி என்றைக்கும் உனக்கானது' என்று அவன் எழுதியிருந்ததை வாசித்தவுடன் ஓவென்று சத்தமிட்டு அழத்தொடங்கிவிட்டேன்.

குசினிக்குள் இரவு உணவுக்காய் புட்டு அவித்துக்கொண்டிருந்த அம்மா, ஏதோ அசம்பாவிதம் நடந்துவிட்டதோ என ஓடிவர, அவரின் கண்பார்வைக்குள் படாமல் அதற்கிடையில் ஆட்டோகிராப்பை மறைத்துவிட்டேன். அம்மா என்ன காரணம் என்று உருக்கிக்கேட்டபோது, எங்களோடு படித்துக்கொண்டிருக்கின்றவர்கள் எல்லாம் இயக்கத்துக்குப் போகின்றார்கள், நானும் போக வேண்டி வருமோ என்று எனக்கும் பயமாக இருக்கிறது' என்று சொன்னேன். 'நீ எங்களின் ஒரேயொரு பிள்ளை, உன்னை எப்படியாயினும் இயக்கத்துக்குப் போவதிலிருந்து தடுத்துவிடுவோம் கவலைப்படாதே' என அம்மா தலையைக்கோதி என்னை ஆறுதல்படுத்தினார்.

பிறகு பாடசாலைக்குப் போவதுமட்டுமில்லை, ரியூசனுக்குப் போவதுகூட எனக்குபிடிக்கவில்லை. எப்பவுமே அவனது நினைவுகள்தான். என்னால் அதிலிருந்து விடுபடமுடியவே இல்லை. எப்போதும் அவன் தந்த ஆட்டோகிராப்பை என்னோடு காவியபடியே இருப்பேன். அது ஏனோ அவன் என்னருகில் இருக்கின்றான் என்ற உணர்வைத் தரும். அந்தக் காய்ந்துபோன இரத்த எழுத்தையெல்லாம் பார்க்கும்போதெல்லாம் என் மீது எவ்வளவு நேசம் இருந்தால் இப்படி எழுதமுடிந்திருக்குமென நினைக்க நினைக்க இன்னும் நெஞ்சு விம்மும்.'

இவ்வாறாகக் கதையைச் சொல்லிக்கொண்டு எங்கோ தொலைந்துகொண்டிருந்த அவள் அருகிலிருந்த கிளாஸில் இருந்த தண்ணீரைக் குடித்து நிதானித்தபடி என்னைப் பார்த்து,'உனக்கு எனது இந்தக் கதையைக் கேட்க சிலவேளை சிரிப்பாக இருக்கும் இல்லையா' என்றாள்.

'எந்த முதல் காதலானாலும் அதுபெரும் பரவசத்தைத் தருகின்ற ஒன்று. என்னால் நீங்கள் சொல்வதை ஒரளவு உணரமுடிகிறது' என்றேன்.

*3.*

'இப்படி ஒருநாள் ஆட்டோகிராப்போடு பாடசாலைக்குப் போனபோது ஒரு தோழி எனக்குத் தெரியாமல் அதை எடுத்து புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்திருக்கின்றாள். எங்களுக்குப் படிப்பிக்கும் ஆசிரியர் அதைக் கண்டுபிடித்து எடுத்துக்கொண்டு போய்விட்டார். நான் வகுப்பில் நல்லாய்ப் படிக்கும் மாணவி என்பதால் அந்த ஆசிரியருக்கு என்மேல் மிகுந்த அக்கறை. அத்துடன் இயக்கத்துப்போன இவனின் சித்தப்பா முறையானவர் அவர்.

நான் ஸ்டாஃப் ரூமுக்குப் போய், 'சேர் அந்த ஆட்டோகிராப்பை தயவுசெய்து தாருங்கள்' என கெஞ்சிக்கேட்டேன். என்னைத் தனியே ஓரிடத்தில் அழைத்துச் சென்று, 'நீ நல்லாப்ப் படிக்கிற பிள்ளை, இப்போதே இந்தக் காதல் கீதல் என்று ஒன்றுக்குள்ளும் சிக்கிவிடாதே' என்று ஒரு நீண்ட அறிவுரையைத் தந்தார். 'சேர் நீங்கள் சொல்கிறதை எல்லாம் நான் கேட்டுக்கொள்கிறேன். ஆனால், அந்த ஆட்டோகிராப்பை மட்டுந் தாங்கோ. இதுதான் என்னையும் அவனையும் இணைக்கின்ற ஒரேயொரு பொருள். அதுவும் இல்லாவிட்டால் என்னால் தாங்கமுடியாது' என்று திரும்பத் திரும்பக் கேட்டும் அவர்,'நீ படிக்கின்ற வேலையை மட்டும் பார்' என்று கடுங்குரலில் கூறிவிட்டார். பிறகு அதை ஒருபோதும் எனக்குத் திருப்பித் தரவே இல்லை.

நான் அன்றிரவும் வீட்டில் நீண்டநேரம் அழுதேன். அவன் தான் இயக்கத்துப் போய்விட்டான் என்றால், என்னோடு தினமும் மானசீகமாய் அவன் பேசிக்கொண்டிருந்த ஆட்டோகிராப்பையும் எடுத்துப் போய்விட்டனரே என்று நினைக்க, என்னால் தாங்கமுடியாமல் இருந்தது. நானும் இயக்கத்துக்குப் போனால் என்ன என்று கொஞ்சநாட்களிலேயே எனக்குள் ஒரு சன்னதம் வரத்தொடங்கிவிட்டது. தொடக்கத்தில் இயக்கத்துக்குப் போவதற்கே பயப்பிட்ட நான், இயக்கத்தில் போய்ச் சேருவதற்கு தயாரானதை இப்போது நினைத்தாலும் ஆச்சரியந்தான்.

பாடசாலைக்குப் பக்கத்தில் இருந்த இயக்க அக்காமாரின் முகாமிற்கு, ஸ்கூல் யூனிபோர்மோடே இயக்கத்தில் சேர்வதற்காய்ப் போய்விட்டேன். அங்கே இருந்த அக்காமார் என் வீடு, என் குடும்பம் எல்லாம் விசாரித்துவிட்டு, 'தங்கச்சி உங்களுக்கு சின்னவயசு; இப்போது இயக்கத்தில் சேர்க்கமுடியாது' என்று சொல்லிவிட்டார்கள். இல்லை நான் இனி வீட்டை திரும்பப் போகமுடியாது என்று அடம்பிடிக்க அந்த முகாமுக்குப் பொறுப்பானவர் வெளியே வந்து, நடந்தவிவரத்தைக் கேட்டுவிட்டு,'சரி கொஞ்சம்

வளர்ந்தன் பிறகும் இயக்கத்தில் சேரவேண்டுமென நினைத்தால்வாருங்கள்,இப்போதுசேர்க்கமாட்டோம்' என்று கறாராகக் கூறிவிட்டார்.'

இப்படித் தன் கதையைச் சொல்லிவிட்டு சட்டென்று மௌனத்துக்குப் போய்விட்டாள். ஏதோ கடும் துயர் தாக்க, தொடர்ந்து சொல்லக் கஷ்டப்படுகின்றாரோ என்று நினைத்து, 'சரி, இன்னொருநாள் மிகுதிக்கதையைச் சொல்லுங்கள்' என்றேன்.

'அப்படி இல்லை' என்று பெருமூச்செறிந்தாள். திரும்பவும் அமைதிக்குள் மூழ்கி, நீருக்குள் அமிழ்ந்த பறவை சிறகை உதறித்தள்ளுவதைப் போன்று ஒருமுறை தோளைக் குலுக்கி,'இப்படி ஒருபொழுது இயக்கத்தில் சேர வீம்பாய் நின்ற நான்,பின்னர் முள்ளிவாய்க்கால் இறுதிக்காலத்தில் இயக்கம் ஆட்களைத் தேடித்தேடி களமுனைக்கு வலுக்கட்டாயாமாகப் பிடித்துக்கொண்டு போக, ஓடி ஒளித்து பதுங்கியெல்லாம் இருக்கின்றேன், விசித்திரமான காலம்' என்றாள்.

எனக்கு என்ன சொல்வதென்றும் தெரியவில்லை. மௌனமாக இருப்பதைத் தவிர வேறொரு வழியும் எனக்குப் புலப்படவில்லை. நான் எமக்குத் தரப்பட்டிருந்த குளிர்தண்ணீரை எடுத்துச் சற்றுக் குடித்து என்னை நிதானமாக்கிக் கொண்டேன்.

4.

'அதிசயமாக அவன் ரெயினிங் எடுத்துவிட்டு அவனது வீட்டுக்கு ஏழெட்டு மாதங்களுக்குப் பிறகுதிரும்பிவந்தான்.அவன் வீட்டுக்குவந்துவிட்டான் என்று செய்தி தெரிந்தவுடன் எனக்கு இருப்புக் கொள்ளவில்லை. இயக்கத்துக்குப் போனாலே அவர்களை உயிருடன் திரும்பிப் பார்க்கவேமுடியாது என்ற நெருக்கடியான சூழ்நிலைக்குள், எனக்கு காதலை உருகியுருகி எழுதிய ஒருவன் திரும்பி வந்தால், எவ்வளவு சந்தோசமாக இருக்கும். ஏதோ சிறகுகள் எனக்கு வளர்ந்ததுபோலவும் எங்கள் வயல்காணிகளினூடாக மைனாக்கள் கரைய, மயில்கள் தோகை விரித்து அகவ, நான் அவனுடன் சந்தோசமாகப் பறப்பது போலவும் உணர்ந்தேன்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு அவன் எங்கள் பாடசாலைக்கு வந்திருந்தான். என்னை வந்து சந்திக்கப்போகின்றான்,நான் அவனின் காதலுக்கு முழுச் சம்மதம் சொல்லவேண்டும் என்ற விதிர்வி திர்ப்புடன் அவனுக்காய்க் காத்துக்கொண்டிருந்தேன்.

என் பக்கமே வரவில்லை. பாடசாலையில் இருந்த மற்ற ஆட்களோடு கதைத்துக்கொண்டிருந்த அவன் என்னோடு பேசவே இல்லை. நான் ஒருமுறை அவன் பெயரைக் கூப்பிட்டபடி அருகில் போனபோதும்,'என்னோடு பேசாதே, நீ என் சித்தப்பாவிடம்சொன்னதுஎல்லாம்எனக்குத்தெரியும்' என்று இதுவரை நான் அறிந்திராத கடுங்குரலில் அவன் சொல்ல எனக்குப் பெரும் அதிர்ச்சியாக அது இருந்தது.

நான் திரும்பி என் வகுப்புக்குள் போய்விட்டேன். எங்கள் ஆசிரியரான அவனின் சித்தப்பாதான் வேறொருமாதிரி கதையை அவனுக்குச் சொல்லி என்னிடமிருந்து அவனைத் தூரவிலகும்படியாகச் செய்துவிட்டார் என்பதைப் பின்னர் அறிந்தேன்.

நான் தான் ஆட்டோகிராப்பை வேண்டுமென்று அவரிடம்கொண்டுபோய்க்கொடுத்ததாய்ஒருகதையை உருவாக்கி, அவனிடம் இல்லாததும் பொல்லாததுமாய் என்னைப் பற்றிச் சொல்லியிருக்கின்றார். அதற்குப் பிறகு நான் அவனோடு பேசவே இல்லை. கொஞ் சநாட்களில் விடுமுறை முடிந்து இயக்க முகாமுக்குப் போய்விட்டான். ஆனால், என்னால் அவனின் சித்தப்பாவை அதற்குப் பிறகு மன்னிக்க முடியவே இல்லை.'

இப்படி அவளின் கதையைக்கேட்டுக்கொண்டிருந்த நான், 'இடையில் குறுக்கிடுவதற்கு மன்னிக்கவும். ஏன் நீங்கள் உங்கள் நிலையை, உண்மையில் நடந்தவற்றை அவனுக்குச் சொல்ல முயற்சிக்கவில்லை' எனக் கேட்டேன்.

'எனக்கு அன்றைக்கு அப்படி எதுவுமே தோன்றவில்லை.அவ்வளவுநேசத்துடன்அவனுக்காய்க் காத்திருந்த என்னை இப்படி எதுவும் கதைக்காமல் உதாசீனப்படுத்தியதே பேரிடியாக இருந்தபோது வேறு எதையும் நிதானமாக யோசிக்க முடியவில்லை' என்றாள்.

'உண்மைதான். சிலவேளைகளில் சிலவற்றுக்குக் காரணங்களே இல்லாததுபோல, எல்லாம் முடிந்தபின் இப்படிச் செய்திருக்கலாம் என்று, பிறகுதான் ஆறுதலாய் இருந்து பார்க்கும்போது யோசிக்கமுடிகிறது. ஆனால், ஒரு சம்பவம் நடக்கும்போது அப்படி எல்லாக் கோணங்களிலும் சிந்திக்கமுடிவதில்லை' என்று ஏதோ என் வாழ்வில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தோடு இணைத்து இதைச் சொன்னேன்.

'இப்படிச் செய்தது கூடப் பரவாயில்லை. திரும்பப் போர்க்களத்துக்குப் போவதற்குமுன், ஒருநாள் மாலை சைக்கிளில், அவன் தனது மச்சாளை ஏற்றிக்கொண்டு வந்ததைத்தான் என்னால் மறக்கவோ மன்னிக்கவோ முடியவில்லை. என்னை நேசிப்பதாய்ச் சொல்கின்றவன், இப்படிச் செய்தால் பிறகு எப்படி அவனைக் காதலிக்கமுடியும்?'

'அன்று எனக்கு கூடைப்பந்தாட்ட போட்டி ஒன்றும் இருந்தது. இந்தக் காட்சியைப் பார்த்தபின் அன்றைக்கு முக்கியமான ஆட்டமாக இருந்தபோதும் நான் அந்த மாட்சில் விளையாடவே இல்லை. ஏனென்றால் அந்த அளவுக்கு நான் உடைந்துபோ யிருந்தேன். அவனுக்கும் எனக்குமான பெரும் விரிசல் அன்றுதான் நிகழ்ந்திருக்கவேண்டும். நான் தேவை யில்லை என்றுதானே அவனின் மச்சாளை சைக்கிளில் ஏற்றிக்கொண்டுவந்து எனக்கு வேண்டுமென்று காட்டி யிருக்கின்றான்.'

'இருக்கலாம். ஆனால், அவனுக்கு வேறு ஏதோ காரணம் சிலவேளைகளில் இருந்திருக்கலாம். இல்லாவிட்டால் எதையாவது உங்களுக்கு சூட்சுமாகப் புரிய வைக்க முயன்றிருக்கலாம்.'

'என்ன சொல்கிறாய் நீ?'

‘சிலவேளை மரணம் என்பது அருகில் நெருங்கி நிற்கும்போது உங்களைக் காக்க வைக்கக்கூடாது என்கின்ற ஒருவகைப் பிரியத்தால் கூட உங்களிடமிருந்து விலத்திப் போக இப்படி ஏதாவது அவன் செய்திருக்கலாம்‘ என்றேன்.

‘யுத்தம் என்பது மட்டுமில்லை வாழ்க்கைகூட ஒரு சினிமாப்படம் இல்லை.நிறுத்தி நிதானித்து, விரும்பியபோது பார்ப்பதற்கும் ஆராய்வதற்கும்’ என என் விழிகளை ஆழ ஊடுருவிப் பார்த்தபடி சொன்னாள்.

‘வாழ்க்கை சினிமா இல்லைத்தான். ஆனாலும் நாங்கள் சினிமாவினூடும் வாழ்க்கையைக் கற்றுக்கொள்கின்றவர்கள். எதை யோசிக்கின்றோமோ அதுவாக ஆகின்றோம் எனப் புத்தர் சொல்கின்றமாதிரி, நாம் எதைக் கூடப் பார்க்கின்றோம் எதைக் கூடக் கதைக்கின்றோமோ அதுகூட எம்மையறியாமல் பாதிப்புச் செய்யலாம் அல்லவா’ என்றேன்.

‘நீ அவனின் உள்ளம் எல்லாம் அறிந்தவன் மாதிரிக் கதைக்கின்றாய்.’

‘அப்படி இல்லை. எதையும் தெளிவாக -அதுவும் யுத்தகாலத்தில்- சொல்லமுடியாது என்பதைத்தான் உணர்த்த விழைகிறேன்.’

*5.*

‘இப்படியெல்லாம் செய்துவிட்டுப் போனவனை, பிறகு இன்னொருமுறை தற்செயலாகச் சந்திக்கவேண்டி வந்தது. நான் ஒருநாள் கிளிநொச்சியிலிருந்து முல்லைத்தீவுக்கு பஸ்சில் போய்க்கொண்டிருந்தேன். சட்டென்று ஒருவன் பஸ்ஸில் ஏறுவதைக் கண்டேன். அவனேதான். இயக்கவேலைக்காய் ஏதோ அந்தப் பக்கமாய் வந்திருக்கின்றான். என்னைக் கண்டவுடன் பஸ்ஸூக்குள் ஏறியிருக்கின்றான். ஆனால்,கிட்டவந்து என்னோடு எதுவும் பேசவே இல்லை. தூரத்தில் இருந்து அவனை நானும் பார்த்துக்கொண்டிருந்தேன். அந்தக் கண்களில் தெரிந்தது பரிவா, காதலா எதுவென்றே ஊகித்தறியமுடியாதிருந்தது.

நானும் அவன் தனது மச்சாளை சைக்கிள் ஏற்றிவந்து எனக்குக் காட்டியதில் இருந்து அவன் மீது பெருங் கோபத்துடன் இருந்தேன். எனவே, அவனைப் பார்த்து சிரிக்காமல்தான் இருந்தேன். இப்படி எனக்காய் பஸ்ஸூக்குள் ஏறியவன் என்னிடம் வந்து இரண்டு வார்த்தை கதைப்பதில் என்ன கெட்டுவிடப் போகின்றது. ஆனால், அன்றும் ஒன்றுமே பேசாமல்தான் அவன் இருந்தான். பிறகு நான்கைந்து பஸ் ஸ்டொப்புக்களுக்குப் பிறகு தானாகவே இறங்கிப் போனான்.’

‘இது ஒரு கனவு போல இருக்கிறது. உங்களுக்காய் சரியாகத் தெரியுமா அது அவன் தானென்று. அவனின் நினைப்பில் நீங்கள் இருந்ததால் அப்படி ஒரு நினைப்பு வேறு எவரையும் பார்த்து வந்திருக்கவும் கூடும்‘ என்று நான் குறுக்கிட்டேன்.

‘இதென்ன விழல் கதை. அவனை எனக்கு நன்கு தெரியும். அதிலும் அவன் சின்ன வயசில் இருக்கும்போது துப்பாக்கிச் சன்னம் உரஞ்சிப்போன காயமென்று பின்னங்கழுத்தில் வடுவாக இருப்பதைக் காட்டியிருகின்றான். அவன் இறங்கிப்போனபோது நான் திரும்பிப் பார்க்கையில் அந்தக் கறுப்புத் தடம் தெளிவாகத் தெரிந்தது.’

*6.*

‘இறுதியில் எல்லாமே முள்ளிவாய்க்காலுக்குள் முடக்கப்பட்டுக்கொண்டிருந்த காலம். உனக்குத் தெரியுந்தானே மே 18ந் திகதி அனைத்துமே முடிவுக்கு வந்துவிட்டன. நானும் எங்கள் குடும்பமும் மே 17 வரை இயக்கத்தின் கட்டுப்பாட்டுப் பகுதிக்குள்தான் நின்றோம். இப்போதும் சரியாக ஞாபகமிருக்கின்றது. மே 17 காலை நாங்கள் நின்ற பகுதிக்கு ஒரு பஜீரோ உறுமலோடு வந்து நின்றது. நீ நம்பமாட்டாய். அவனேதான். ஒரு அதிசயம் போலத்தான் அது நிகழ்ந்தது.

எங்கையோ என்னைப் பற்றி விசாரித்து எங்கள் இடத்தைக் கண்டுபிடித்திருக்கின்றான். இப்போது அவன் மீது எனக்கு எந்தக் கோபமும் இருக்கவில்லை. அவன் உயிரோடு இருப்பதே பேரதிசயந்தான். வந்தவன் இரண்டே இரண்டு வார்த்தைகள்தான் சொன்னான்.

‘நீ இங்கையே இப்படியே இரு. எல்லாமே முடிந்துவிட்டது. ஆயுதங்களைக் கீழே போட்டு நாம் விரும்பியமாதிரி முடிவுகளை எடுக்க இயக்கம் எங்களுக்குச் சொல்லிவிட்டது.நான் மத்தியாயம் போல வருவேன். நாங்கள் சேர்ந்து ஆமியின் பக்கம் போவோம்.’

அவ்வளவுதான் அவன் சொன்னது. அதற்குள் அவன் கையில் வைத்திருந்த வோக்கி அழைக்கத் தொடங்கிவிட்டது. என்னை சிலநொடிகள் உற்றுப்பார்த்தான். அந்தக் கண்களில் எவ்வளவு காதல் இருந்தது. பிறகு திரும்பிக்கூடப் பார்க்காது அவன் போய்விட்டான். போயே விட்டான்.’

சட்டென்று அவளது கண்களில் இருந்து நீர் பொலபொலவென்று கொட்டத் தொடங்கியது. போரின் எத்தனை எத்தனை நினைவுகள் அவளுக்குள் பெருக்கெடுத்து ஓடத்தொடங்கியதோ? அதில் நேசம் கொண்ட அவன் மீதான நினைவுகளும் நிச்சயம் கலந்திருக்கும்.

அழாதீர்கள் என்று சொல்வது இந்த இடத்தில் அநாகரீகமாகவே இருக்கும். அவளின் கையை எடுத்து ஆறுதலாகத்தடவிவிட்டேன். பக்கத்திலிருந்து நாப்கினை எடுத்து கண்களைத் துடைக்கக் கொடுத்தேன்.

கொஞ்ச நேர அவகாசமெடுத்துவிட்டு, ‘அதுதான் அவனை நான் இறுதியாகப் பார்த்தது. நான் மணித்தியாலக்கணக்காய் அவனுக்காய்க்காத்திருந்தேன். அடுத்தநாள் ஆமியின் பகுதிக்குள் நாங்கள் நுழைந்தோம். அப்படிக் கூடச் சொல்லமுடியாது. இனி இயக்கத்துக்கு என்று ஓர் அங்குலம்கூட சொந்தமில்லாத ஒரு காலத்துக்கு நாங்கள் வந்திருந்தோம். அவன் வரவே இல்லை. ஆனால், என்னோடு கூடவே ஆமியின் பக்கம் வருகின்றேன் என்று சொன்னவன், எனக்காய் என்றைக்குமாய் காத்திரு என்று மட்டும் சொல்லவே



இல்லை. இன்னும் புரியாது இருப்பது அந்த ஒன்றே ஒன்றுதான்.'

'என்ன?'

'இரத்தத்தில் காதலைச் சொல்லிக் காட்டிவிட்டுப் போன பிறகு நாங்கள் சந்தித்த அரிய மூன்று பொழுதுகளில் ஒருபோது கூட அவனுக்காய் என்னைக் காத்திருக்கச் சொல்லவே இல்லை. இயக்கத்துக்குப் போய்விட்டு முதன்முறை விடுமுறைக்கு வந்தபோது என்னோடு பேசாமலே முகத்தைத் திரும்பினான். இரண்டாவதுமுறை முல்லைத்தீவு பஸ்சில் ஏறியபோது கூட ஒற்றைச்சொல் என்னோடு பேசவில்லை. கடைசியாய் மே-17 காலை சந்திக்கும்போது என்னோடு கூட வருகின்றேன் என்று சொன்னானே தவிர, எனக்காய் என்றைக்குமாய்க் காத்திரு என்று சொல்லவே இல்லை. அந்தளவுக்கு என்னைப் புரிந்து வைத்திருந்திருக்கின்றான் போலும். என் வாழ்க்கையின் மீது அவ்வளவு அக்கறை இருந்தால்தானே ஒருவன் இப்படிச் சொற்களை வெளிப்படுத்துவதில் கூட கவனமாக இருந்திருப்பான்.'

'உண்மைதான். உங்களை அறியாமலே அவனோ அல்லது நம்மால் உணர்ந்துணர முடியா ஏதோ சக்தியோ இப்படிச் செய்திருக்கலாம். இவ்வாறு எதன் மீதோ பாரத்தைப் போடாதுவிடின் நாம் நம் துயரங்களிலிருந்து தப்பித்துப் போகவேமுடியாது.'

'முள்ளிவாய்க்கால் முடிந்தபின், பல மாதங்கள் முள்வேலிச் சிறைக்குள் சிறைப்பட்டு வெளியே வந்தபோது ஒருநாள் அவனின் தாயாரைச் சந்தித்திருக்கின்றேன். அவர்களுக்கு இன்னும் மகன் எங்கோ உயிருடன் இருக்கின்றான் என்றுதான் நம்பிக்கை. வலிந்து காணாமல் ஆக்கப்பட்ட பல்லாயிரக்கணக்கானவர்களில் அவனும் ஒருவன் எனத்தான் அவனின் தாயார் நினைக்கின்றார். அவனோடு கதைத்த

கடைசி ஆள் நானாகத்தான் இருக்கவேண்டும்.'

'எவ்வளவோ மாதங்களுக்குப் பிறகு, யுத்தம் முடிவதற்கு முதல் நாளான மே 17இல் இப்படி வந்து அவன் உங்களை சந்தித்தற்குக் கூட நம்மால் பகுத்தறிந்து கொள்ளமுடியா ஏதேனும் ஒரு காரணம் இருந்திருக்கலாம்.'

'அவ்வளவு தூரம் என்னைத் தேடி வந்தவன், ஓரிரு வார்த்தைகள் மட்டுந்தான் சொல்லிவிட்டு போனான் என்பதைவிட, அவ்வளவு காலம் இருந்துவிட்டு யுத்தம் முடிகின்ற கடைசிநாள் அன்று என்னை ஏன் தேடிவந்தான் என்பதுதான் பெரும் ஆச்சரியமாக இருக்கிறது.'

'அவனது ஆன்மா இறுதியில் உங்களைப் பார்க்க ஆசைப்பட்டிருக்கலாம். சேர்ந்து வாழ முடியாதுவிட்டாலும் இறுதியாய்ச் சந்திக்க இந்த இயற்கை உங்கள் இருவருக்கும் சந்தர்ப்பம் வழங்கியிருக்கின்றது. அப்படித்தான் இவ்வாறான விடயங்களில் நாங்கள் ஆறுதல் கொள்ளமுடியும். இல்லாவிட்டால் பைத்தியமாவதைத்தவிர நமக்கு வேறு வழியில்லை.'

'எனக்கு அவனது அம்மாவைப் போல, அவன் இப்போது எங்கேயாவது உயிரோடு இருப்பான் என்பதில் நம்பிக்கை இல்லை. அவனுக்கு என்னைச் சந்தித்த மே 17இற்கும் யுத்தம் முடிந்த மே 18இற்கும் இடையில் ஏதோ நடந்திருக்கும். '

'இந்தப் போரில் எல்லாமே நடக்கச் சாத்தியமிருக்கின்றது.'

'என்னைத் தேடி வந்து திரும்பிப்போகும்போதுதான் அவனுக்கு ஏதும் நடந்திருக்குமோ என்று நினைக்க வரும் துயரைத்தான் என்னால் தாங்கமுடியாது இருக்கின்றது. அவ்வளவு காலமும் உயிரோடு இருந்தவன், ஒரேயொரு நாள்- அந்தக் கடைசிநாள் சாகாமல் தப்பி யிருந்தால் இப்போது அவனோடு நான் வாழ்ந்து கொண்டிருந்திருப்பேன்.'

'அப்படி நினைத்தேங்கினால் நம் வாழ்வு வீணாகிவிடும். அவன் உங்கள் மேல் கொண்ட நேசத்துக்குக்கூட மதிப்பில்லாது போய்விடும்.'

'அவன் இறுதியாய்ச் சந்தித்தபோது, எனக்காய்க் காத்திரு என்று ஒற்றை வார்த்தை சொல்லி யிருந்தால் நான் இப்போது கூட அவனுக்காய் காத்திருந்திருப்பேன்.'

'ஆனால், அப்படிச் சொல்லி நீங்கள் காத்திருப்பின் உங்கள் வாழ்வு பிறகு கானலாகிவிடும்.'

'அது கூட அவனுக்கு நன்கு தெரிந்திருக்கும்போலும். அப்படிச் சொல்லிவிட்டால் நான் அவன் சொற்களில் உறுதியாய் இருந்திருப்பேன் என்றுதான் அவன் அதைச் சொல்லவில்லையோ தெரியாது.'

'உங்களை நன்றாக அறிந்த ஒருவன் அவன் என்பதைத்தவிர வேறொன்றும் நான் சொல்வதற்கு இல்லை.'

7.

'இப்படி முள்ளிவாய்க்காலில் யுத்தம் முடிவுக்கு வந்து, மூன்று வருடங்களுக்குப் பிறகு அவனது ஒரு நண்பனை தற்செயலாய்ச் சந்தித்தேன். அவனும் இவனுந்தான் கடைசிநேரத்தில் களமுனைகளில் பல இடங்களில் ஒன்றாகச் சேர்ந்து நின்றிருக்கின்றனர். அவனின் நண்பன் சொன்னதைத்தான் என்னால் இன்னும் நம்பமுடியாது இருக்கின்றது. அவ்வாறான பொழுதுகளில் அவனது காற்சட்டைக்குள் எனது புகைப்படம் ஒன்று இருந்ததாம். அடிக்கடி அதை எடுத்துப் பார்த்து பார்த்து அழுதுகின்றவனான். இவன் என்ன காரணம் என்று கேட்கும்போதெல்லாம் ஒன்றுமில்லையென கண்ணைத் துடைத்துவிட்டுப் போ யிருவானாம். பார், இப்படி என் மீது எவ்வளவு காதல் வைத்திருக்கின்றான்.'

'நமது இந்த யுத்தம் எதைத்தான் எமக்கு மிச்சம் வைத்திருக்கின்றது. ஞாபகங்களாய் விட்டுவைத்திருப்பதெல்லாம் கொடும் நினைவுகளைத் தவிர வேறொன்றுமில்லை.'

'அவன் கள்ளன். எனக்குச் சொல்லாமல் கடைசிவரை என்னை அவ்வளவு காதலித்திருக்கின்றான்.'

'உண்மையான நேசம் எப்படியோ எவரினூடாகக் கடத்தப்பட்டு உயிர்ப்புடந்தான் இருக்கும். அவன் இருக்கின்றானோ இல்லையோ, அவனின் காதலினூடாக நீங்கள் என்றென்றைக்குமாய் அவனை நினைவு கூறுவீர்கள்.'

பிறகு நாங்களிருவரும் வேறு எதையெதையோ எல்லாம் கொஞ்சம் நேரம் கதைத்துவிட்டு பிரிவதற்கு ஆயத்தமானோம். அவளுக்கு அடுத்தநாள் கொழும்பிலிருந்து சொந்த ஊருக்குப் போவதாய்த் திட்டம் இருந்தது. அதன்பிறகு சில வாரங்களின் பின்தான் கொழும்புக்குத் திரும்புவாள் எனச் சொன்னாள். அவள் திரும்பும் காலத்துக்கிடையில் நான் கனடாவுக்கு விமானம் ஏறவேண்டியிருந்தது.

'என்னோடு உங்களின் இந்தக் கதையைப் பகிர்ந்தமைக்கு நன்றி' எனச் சொல்லி எழுந்தபோது, என்னருகில் வந்து அணைத்து விடைதந்தாள்.

அணைத்த அந்தப்பொழுது, பக்கத்தில் யாரேனும் இருக்கின்றார்களா எனப் பார்த்துவிட்டு, என் காதுகளுக்கு மட்டுமே கேட்கக்கூடியதாக, 'இயக்கத்தில் இருக்கும் எல்லோரும் கடைசிநேரத்தில், 'புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்' என்று சொல்லித்தான் சாவார்கள். ஆனால், எனக்கு தெளிவாகத்தெரியும் அவன் இறுதியில் என் பெயரை அழுத்தமாக உச்சரித்துத்தான் இறந்திருப்பான்.'

அப்போது அவளின் ஒரு கண்ணீர்த்துளி வெம்மையாக என் தோளில் விழுந்து முதுகில் வழுக்கியோடியது.

அந்தத் துளியின் தாங்கமுடியாக் கனத்திலும் வெம்மையிலும் அவன் இன்னமும் உயிரோடு இருந்தான்.●

**"இளங்கோ"** <elanko@rogers.com>

(25ஆம் பக்கத் தொடர்ச்சி)

பெண் கதை சொல்லியைப் பார்த்ததில் மகிழ்ச்சி அடைந்திருப்பார்கள் என்று தோன்றுகிறது. அவள் பெண் என்று நான் வலியுறுத்தவே இல்லை. இந்த ஆண், பெண் விஷயம் நாவல்களில் நிகழும் ஒன்றுதான். அவள் பெண் என்று அடிக்கோடிட்டுக் காட்டுவதுதான் எனக்கு அபத்தமாகப் படுகிறது. ஏனெனில், பெண்கள் நிஜ வாழ்வில் செய்ய முடியாத விஷயங்கள் அல்ல அவை. அவள் பேசுகிறாள், சிரிக்கிறாள். பேசுகிறாள், பேச மட்டுமே செய்கிறாள். பிரா அணிந்திருக்கிறாள். ஆனால், அவள் எந்த நேரமும் மன அழுத்தத்தில் இருப்பதில்லை. பெண் நிலையை வலியுறுத்துவதில்லை. நிறையப் பெண் வாசகர்கள் பாராட்டினார்கள்.

ஆனால், சில தீவீர பெண்ணியவாதிகள், ஆண் பெண்ணியவாதிகள், பெண் அப்படி இருக்க முடியாது என்று சொன்னார்கள். நான் அவர்களிடம் இது ஆண் பேரினவாதம் என்று சொன்னேன். ஒரு நாயோ பூனையோ அதைச் செய்யாது என்று நீங்கள் சொல்லலாம். ஆனால், பெண் செய்ய முடியாது என்று சொல்ல முடியாது. விதவிதமான பெண்கள் இருக்கிறார்கள். அதே போல் ஆண்களும் இருக்கிறார்கள்.

**உங்கள் கதை சொல்லிகளின் மூன்று முக்கியமான விஷயங்களில் உங்களைப் பிரதிபலித்தல் என்பதும் ஒன்று என்று சொல்கிறீர்கள். ஒரு கதாபாத்திரம் நேரத்தைச் சுருக்கவும் இணக்கமான தருணங்களை நீட்டிக்கவும் ஆழ்நிலைக்குச் செல்லவும் விருப்பமாக இருக்கிறது. இதன் பின்புலம் என்ன?**

ஒரு நாவலில் நீங்கள் நேரத்தை உருவாக்கலாம். ஆனால், நேரம் என்ற ஒன்று இல்லை. ஒரு நிமிடத்திற்கு அறுபது நொடிகள் என்ற நேரக் கணக்கு இருக்கிறது. ஆனால், வாழ்வில் நமக்கான கணங்கள் வேறுபட்ட நேரத்தைக் கொண்டிருக்கின்றன என்பது தெளிவாகத் தெரியும். அது நாம் சில விஷயங்களை ஞாபகத்தில் கொள்ளும்போது இன்னும் தெளிவாக புரியும். அது நீளமோ குறைச்சலோ என்பது முக்கியமில்லை; சூழ்நிலைதான் முக்கியம். உதாரணமாக உங்களிடம் சண்டையிட்டுப் பிரிய நினைக்கும் பெண்ணிடம் வாக்குவாதமோ விளக்கமோ கொடுக்க முழு இரவையும் எடுத்துக்கொள்ள வேண்டியதிருக்கும். நிறையப் பேர் ஓரிரு கணங்களில் மட்டுமே வாழ்கிறார்கள். அது நிகழ்ந்ததை மீண்டும் நினைக்கும்போது சில வார்த்தைகளோ ஒரு பார்வையோ மட்டும்தான் உங்கள் மனதில் உறைந்து போயிருக்கும். உங்கள் நினைவில் அவை வேறுபட்ட காலத்தை கொண்டிருக்கும். நிஜமான, அவசியமான காலம் உங்களோடு தானிருந்திருக்கும் ஆனால், அதை நீங்கள் கவனித்திருக்க மாட்டீர்கள்.

நாவலில் இத்தகைய தருணங்களை அது நிகழும் அளவிலேயே இருக்கச் செய்யலாம். நான் இதனை அப்படியே நிறுத்தப் போகிறேன். ஏனெனில், இது உண்மையான தருணம். நான் அதை முக்கியமான தருணமாக்குவேன். வாசகர்கள் அதனை நினைவில் வைத்திருப்பார்கள். வாழ்க்கை அவனுக்கோ அவளுக்கோ கொடுக்க முடியாத ஒன்றை அது நிகழ்ந்த விதமாகவே நான் கொடுக்கிறேன், நேரம் தன்னை அழித்துக்கொள்ள நேரமில்லாதபோது என்ற




தெளிவோடு இருந்தால்.

நான் அதைச் செய்வதற்கான காரணம் புனைகதையில் நாம் நம் வாழ்வை மீட்டெடுக்கவே. பிரச்சினை என்னவென்றால் வாழ்வு வாழும் முன் கடந்து போய்விடுகிறது. நான் ஸ்டெர்ன், ப்ரூஸ்ட் ஆகியோரிடமிருந்து இதனைக் கற்றுக்கொண்டேன். அவர்கள் அதனை அற்புதமாகச் சாதித்திருக்கிறார்கள். ப்ரூஸ்டில் ஒருவரை சந்திக்க வரும் இன்னொருவரை வெளியே காத்திருக்க வைக்கிறார்கள். அது அப்படியே விட்டுவிட்டு இருபது பக்கங்கள் நகர்கிறது. அதன் பின் அந்த மனிதன் அங்கு சந்திக்க வந்த கதாபாத்திரமாக வருகிறான்.

அவர் அங்கு மூன்று நிமிடங்கள் காத்திருந்தார். அதற்கு இருபது பக்கங்கள் தேவைப்பட்டது. அதில் என்னென்னவோ சம்பவங்கள் நடக்கின்றன. மனதில் தோன்றும் பல சம்பவங்கள் அற்புதமாக வெளிப்படுத்தப் படுகின்றன. உணராத பரிமாணத்தை நமக்கு அளிக்கின்றன. அதுதான் மிக உன்னதமான நாவலின் கணம். கவிதையைவிட நாவல் செய்யக் கூடிய உன்னதமான தருணம்.

அடுத்த இதழில் முடியும்..

**ஜெகநாத் நடராஜன்**

<jaganathanvr4@gmail.com>

# ஆலிஸ் மன்றோ
# நோபலை திரும்பிப் பார்க்க வைத்த ஆளுமை

ஸிந்துஜா

"ஒருசிறுகதை என்பது நாம் பின்பற்றும் சாலை அல்ல... அது ஒரு வீட்டைப் போல. நீங்கள் அதன் உள்ளே போய் சற்று நேரம் தங்குகிறீர்கள்; முன்னும் பின்னும் அலைகிறீர்கள். விருப்பப்படும் இடத்தில் உட்காருகிறீர்கள். அறையும் தாழ்வாரங்களும் எவ்வாறு அமைந்துள்ளன என்று பார்க்கிறீர்கள். ஜன்னல் வழியாக வெளியில் தெரியும் உலகம் எவ்வளவு மாறுதலாகக் காட்சியளிக்கிறது என்று உணருகிறீர்கள். நீங்கள் ஒரு விருந்தினராக, வாசகராக அந்த அடைக்கப்பட்ட இடத்தில் உங்கள் மாற்றத்தை எதிர்கொள்கிறீர்கள். அந்த இடம் போதுமானதாக, சுலபமாக அல்லது வளைவுகளுடன் திருப்பங்களுடன் உள்ளதா, வசதியாக அலங்காரமாக இருக்கிறதா என்று பார்க்கிறீர்கள். நீங்கள் மறுபடியும் மறுபடியும் அந்த வீட்டுக்குள், கதைக்குள், புகுந்து பார்க்கிறீர்கள். ஒவ்வொரு முறையும் அது முன்பு பார்த்ததைவிட வித்தியாசமாகப் பெரிதாக இருக்கின்றது. அது தனது தேவைக்காகக் கட்டப்பட்டது, நீங்கள் இளைப்பாறவோ அல்லது உங்களை மருட்டவோ அல்ல."

-ஆலிஸ் மன்றோ

ஆலிஸ் மன்றோ மீது அவருடைய வாசகர்கள் எல்லையற்ற பிரியமும் மரியாதையும் வைத்திருப்பவர்கள் என்று சொல்வது தேய்வழக்கு. மார்கரெட் அட்வுட் அவரை, "அகில உலக இலக்கிய சன்னியாசினி" என்று தெரிவித்த கருத்தில் ஆலிஸின் வாழ்க்கையைப் பற்றிய பார்வையும் அவரது எழுத்தின் ஆற்றலும் ஒருங்கே வெளிப்படுகின்றன.

ஜோனதன் ஃப்ரெசன் அவரை ஓர் "இமாலய சாதனை"யாகக் கண்டார்.

ஆலிஸ்மன்றோவுக்கு பரிசளித்த நோபல் குழு, அவர் இருபது பக்கங்களில் ஒரு கதையில் சாதித்து விடுவதை பலரின் நாவல்கள் சாதிக்க முடிந்ததில்லை என்று குறிப்பிட்டது. (உலகில் நூற்றாண்டுகளுக்கும் மேலாக இயங்கி வந்த வந்த நோபல் பரிசு நிர்வாகத்திடமிருந்து பதிமூன்றாவதுபெண்மணியாக நோபல் பரிசை ஆலிஸ்மன்றோபெற்றார்.)

ஆலிஸ்மன்றோவுக்கு பெரும் ஆதரவளித்து அவர் கதைகளைப் பிரசுரித்த, 'நியுயார்க்கர்'பத்திரிகை, "ஆலிஸ் இலக்கிய உலகுக்குக் கிடைத்த வரப்பிரசாதம்" என்று கூறியது.



ஆலிஸ் மன்றோ பற்றி இரண்டு சித்திரங்கள்..

பரிசு கிடைத்தவரிடம்அதைப் பற்றி அறிவிக்க நோபல் பரிசு குழுஎவ்வளவு முயன்றும் அவரைக் கண்டு பிடிக்க முடியவில்லை. அவரைநன்கு அறிந்தவர்களாலும் கூட இந்த விஷயத்தில் உதவ முடியவில்லை என்று பரிசை அறிவித்த குழுவின் செயலர் கூறினார். அவருடைய சமகாலத்திய எழுத்தாளர்களான, இதே நோபல் பரிசு கிடைக்க வெகுகாலம் முயன்று கொண்டிருந்த இலக்கிய ஆளுமைகளுக்கு முன்னால் இத்தகைய அடங்கிய ஆத்மாவை நினைத்துப் பார்க்கும் போது மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது.

கிளின்டனில்வாழ்ந்து கொண்டிருந்த அவர் தன் பெண் வசிக்கும் விட்டோரியா வுக்குச் சென்றிருந்தார். விடியற்காலை நான்கு மணிக்கு அவரது பெண் அவரைப் படுக்கையிலிருந்து எழுப்பி நோபல் பரிசு கிடைத்த விஷயத்தைச் சொன்னாள். "தூக்கத்தின் பிடியிலிருந்து விலகாமலிருந்த என் அம்மாவுக்கு இதைக் கேட்டதும் தாங்க முடியாத வியப்பும் மகிழ்ச்சியும் ஏற்பட்டன" என்று அவள் நிருபர்களிடம் கூறினாள்.



இரண்டாவது சித்திரம்..

இதே அமைதியும் அடக்கமும் அவரை எல்லோராலும் விரும்பப்படும் பெண்மணியாக ஆக்கிவிட்டன. அவர் தன்பிராபல்யத்துக்காக அவருடைய சமகாலப் படைப்பாளியான அட்வுட்டைப் போல அரசியல் அமைப்பை சார்ந்திருக்கவில்லை. ஒவ்வொரு முறை நோபல் பரிசு அறிவிக்கப்படும் போதுகூடவே சச்சரவுகளும் புகார்களும் பலரால் எழுப்பப்பட்டு மாதக்கணக்கில் விவாதங்கள் நடந்து கொண்டிருக்கும். ஆனால், ஆலிஸ் விஷயத்தில் பொறாமைக் குரல் ஒன்றுகூடக்கேட்கவில்லை. சக படைப்பாளியான அட்வுட்டிலிருந்து, கனடாவின் பிரதமர் வரை அவருக்குக் கிடைத்த நோபல் பரிசு பற்றியும்அதற்கான அவரது தகுதி பற்றியும் பெருமிதத்துடன் பேசினார்கள்.

"இந்த நோபல் பரிசு ஆலிஸ் மன்றோவுக்குக் கிடைத்ததால் இன்று தெருவில் நடக்கும் ஒவ்வொரு கனடிய குடிமகனும் தன் தலை சற்று உயர்ந்து நிற்பதாக உணர்ந்தபடி மகிழ்ச்சியுடன் செல்வான்" என்று பிரதமர் கூறினார்.

நோபல் பரிசைப் பொறுத்தவரை சிறுகதைக்கென்று நோபல் பரிசு பெற்ற படைப்பாளி ஆலிஸ் மன்றோ ஒருவர் மட்டுமே. சிறுகதை இலக்கியம் என்பது ஏதோ நாவலை அண்டிப் பிழைப்பது,அது நாவலுக்கு அடுத்தபடியான கட்டத்தில் இருப்பது போன்ற நிழல் எண்ணங்களைத் தூரத் தள்ளிப் போட்ட பெருமை ஆலிஸின் சிறுகதைகளுக்கு உரியது. ஆனாலும் அடிமனதில் அவருக்குத் தன்னால் பல நாவல்களைப் படைக்க முடியவில்லையே என்ற குறை இருந்தது.

ஆலிஸ்,'யுவதிகளின்,பெண்டிரின் வாழ்க்கை'என்று ஒரு நாவலை மட்டும் எழுதியிருக்கிறார். ஒரு முறை அவரின் முகவரான வெர்ஜீனியா பார்பர், "ஆலிஸின் சிறுகதைகள் வெகு நீளமானவை. அதனாலேயே அவர் நாவல் எழுதவில்லையே என்று வருத்தப்பட வேண்டியதில்லை!" என்று கூறினார்.

ஆலிஸ், தனது முதல் சிறுகதையைப் பத்தொன்பதாவது வயதில்(1950) எழுதினார். இரண்டு வருட ஸ்காலர்ஷிப்பில் பல்கலைக்கழகத்தில் படித்த சமயம் இது எழுதப்பட்டது. இந்த நாட்களில் அவர் ஓட்டல் பணியாள், புகையிலை சேகரிப்பவர், நூலகக்குமாஸ்தா என்று பல்வேறு பணிகளில் ஈடுபட்டார். ஆலிஸின் முதல் சிறுகதைத் தொகுதியான, 'இதமான நிழல்களின் நடனம்'கனடாவின் மிக உயரிய

இலக்கியப்பரிசான,'கவர்னர் ஜெனரல் இலக்கிய விருது' பெற்றது. அப்போது இப்பரிசைக் குறிப்பிட்டு விக்டோரியா நகரப்பத்திரிகை ஒன்று, "பரிசை எதிர்பார்க்காத ஒரு தாய்க்குக்கிடைத்த இலக்கிய விருது" என்று தலைப்பிட்டு செய்தியை வெளி யிட்டது.

"இதைத் தொடர்ந்து வெளிவந்த 'யுவதிகளின், பெண்டிரின் வாழ்க்கை'(1971) என்ற நாவலில், மனித வாழ்வின் திகைப்பூட்டும் அச்சுறுத்தும் அம்சங்களை முன்னிறுத்தி, ஒன்றிணைந்த கதைகளாக இணைத்து எழுதியது வாசகர்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றது. "நீ யாரென்று நினைத்துக் கொண்டு இருக்கிறாய்?' (1978) என்னும் அவரது மற்றொரு சிறுகதைத் தொகுதி மறுபடியும் 'கவர்னர் ஜெனரல் இலக்கிய விருது' பெற்றது. இத்தகைய அரிய விருதினை மூன்று முறை அவரது வாழ்நாளில் பெற்றார் என்பது அவரது திறமைக்கும் சாதனைக்கும் ஓர் எடுத்துக்காட்டு.

1980லிருந்து 2012 வரையிலுமான காலகட்டத்தில் ஆலிஸ் நான்கு வருடங்களுக்கு ஒரு முறையாவது ஒரு சிறுகதைத் தொகுப்பை வெளியிட்டார். இவரது கதைகள் உலகப் புகழ் பெற்ற'அட்லாண்டிக்', 'ஹார்ப்பர்ஸ்', 'நியூயார்க்கர்', 'பாரிஸ் ரிவ்யூ' ஆகிய இதழ்களில் வெளிவந்தன. இருபத்தோர் வருடங்களில் 'நியூயார்க்கர்' அவருடைய முப்பத்து நான்கு கதைகளை வெளியிட்டுப் பெருமை தேடிக்கொண்டது. ஆலிஸ் எது எழுதினாலும் முதலில் 'நியூயார்க்கருக்குத் தர வேண்டும் என்று அப்பத்திரிகை ஆலிஸுடன் ஒப்பந்தம் செய்துகொண்டது!

'நியூயார்க்கர்' பத்திரிகை ஆசிரியரும் பிரசுரகர்த்தரு மான டக்ளஸ் கிப்சனுடன் ஆலிஸ் தொடர்ந்துபழகி நீண்ட கால நண்பராகவிளங்கினார். எனவே,டக்ளஸ் பிரசுராலயத்தை விட்டுவிட்டு சொந்தமாகத் தொழில் செய்ய வந்தபோதுஆலிஸ் கனடா மாக்சிமில்லன் பிரசுராலயத்திலிருந்து தனது, 'காதலின் முன்னேற்றம்' என்னும் சிறுகதைத் தொகுதிக்கு வாங்கிய முன் பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிட்டார். 2011இல் கிப்சன் வெளியிட்ட அவரது நினைவுக் குறிப்புகள் நூலுக்கு ஆலிஸ்தான் முன்னுரை எழுதினார்.

ஆலிஸ், அவர் வாழ்ந்த சிறு நகர சூழலை ஒரு பிரத்தியேக அன்புடனும் முழுக் கவனத்துடனும் அவரது கதைகளில் சித்தரித்தார். கற்பனை ஓரளவுக்கு இருந்தால் போதுமானது என்னும் கொள்கைப் பிடிப்புடன் வெளிவந்த படைப்புகளில், அவரது வாழ்வில் அவருக்கு ஏற்பட்ட அனுபவங்களே சம்பவங்களாக, அவர் சந்தித்த மனிதர்களே பாத்திரங்களாக நடமாடியதால் அக்கதைகளின் உண்மைத் தன்மையால் இலக்கிய வாசகர்கள் பெரிதும் ஈர்க்கப்பட்டனர்.

அவரது காலத்திய இலக்கியப் படைப்பாளிகளான வில்லியம் ஃபாக்னர், ஃப்ளானரி ஓ'கார்னர் ஆகியோரது எழுத்துக்களிலும், அவர்களது கிராமிய சூழல்களும், அபிலாஷையற்ற கடும் உழைப்பாளிகளாக மனிதர்களின் சித்திரங்களும் அப்போது பிரபலமாகியிருந்தன. இந்த எழுத்தாளர்களின் பாத்திரங்களில் காணப்பட்ட ஆக்ரோஷமும் வெறியும் ஆலிஸின் கதைகளில் இல்லை. மாறாக அவர்கள் எளிமையின் வடிவாகவும் எதிர்ப்படும் அனுபவங்களுக்கு அடங்கி ஒடுங்கி நடமாடுபவர்களாகவும் இருந்தார்கள்.

ஆலிஸின் எழுத்தில் காணப்பட்ட செழுமையை அவரது வித்தியாசமான வார்த்தைகளில் காணலாம்: "விசேஷமான கவைக்குதவாத ஞானம்", "ஒரே சமயத்தில் விளையாட்டுத்தனத்தையும் தீவிரத்தின் நுட்பத்தையும் காண்பித்த அவள்", "கீச்சிட்ட படியே துள்ளி ஓடும் மகிழ்ச்சி!"....

ஆலிஸ் தனதுவாழ்வின் அனுபவங்களாகப் பெற்றதையும் அவர் படித்த நூல்களிலிருந்து கற்றதையும் கொண்டு எழுதப் புகுந்ததாகச் சொல்லி யிருக்கிறார். 'அவருடைய சொந்த வாழ்க்கையே ஒரு நாவல்தான்; அதை அவர் சிறுகதைகளாக எழுதினார்' என்று கார்டியன் இதழ் ஒருமுறை குறிப்பிட்டது.

1930களில் போரின் காரணமாக உலகம் எதிர்கொண்ட பொருளாதார வீழ்ச்சியின் போது,ஆலிஸ்தனது இளமைக் காலத்தை கழித்தார். சாலையின் முடிவிலிருந்த அவரது வீடு, நாற்பது வயதிலேயே பார்கின்சன் வியாதியில் சிக்குண்ட அவரது தாய், அதனால் வீட்டைக் கவனித்துக் கொள்ள வேண்டிய சுமை, பல்கலைக்கழகத்து உதவித்தொகையைப் பெற அவர் பட்ட கஷ்டங்கள், புத்தக புழுவாயிருந்த ஒரு மாணவனோடு அறியாத இளம்வயதில் ஏற்பட்ட திருமணம், இளம் வயதுத் தாய்மை, விவாகரத்து - இவற்றினால் மனதில் படிந்த கழிவிரக்கமும் குற்ற உணர்ச்சியும் அவரைப் பீடித்துத் தள்ளிய போது, அவர் மனநிம்மதியையும் ஆறுதலையும் பெற்றது படைப்பியக்கத்தின் மூலமே.

ஆலிஸின் எழுத்துக்கள் செக்காவின் எழுத்துக்களுடன் பல விமர்சகர்களால் ஒப்பிடப்பட்டுப் பாராட்டைப் பெற்றது. கதைகளில் கதைக் கருவுக்கு அவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கப்படவில்லை. நிகழ்வுகளின் இயக்கத்தில், உண்மையின் பல முகங்கள் அலட்சியமாகத் தம்மை வெளிப்படுத்துவதை ஆலிஸ் உரத்த குரல் தவிர்த்து எழுதியிருப்பதைப் படிப்பது, ஒருநூதன வாசக அனுபவம். திடீரென்று எதிர்ப்படும் ஓர் தரிசனம், அது தீர்த்துவிடும் பிரச்சினை, குழப்பமான கட்டம், ஒரு புதிய நோக்கில் ஆழமாக அதே சமயம் ஆரவாரமற்று நோக்குவதில் ஏற்படும் பிரகாசம் ஆகியவை ஒரு சிறுகதையைப் பல விதமாக நோக்கும் வாய்ப்பைத் தருகின்றன.

ஆலிஸ் ஆரம்பக் காலக் கதைகளில் வரும் இளம் பெண்கள் தமது வயதுடன், குடும்பத்தை எதிர்கொள்ளும் சங்கடமான தருணங்களை, அவர்கள் வாழ்ந்து வரும் சிறு நகரங்களின் சூழலுடன் புனைவாகத் தந்தார். ஆனால், பிற்காலத்தில் அவருடைய 'வெறுப்பு, சிநேகம், விருப்பு, காதல் திருமணம்'என்னும் சிறுகதைத் தொகுதியும்



'விலகல்'என்னும் தொகுதியும் அவர் எழுத்தில் நடுத்தர வயதுப் பெண்களின் மன உளைச்சல்கள், அவர்களது தனிமை, கணவன் - மனைவி உறவுகள் ஏற்படுத்தும் ஒவ்வாமை, வயதாவது போன்றவற்றை பரிசீலித்தன.

செக்கோவும் ஜாய்சும் தன்னை பதித்த எழுத்தாளர்கள் என்ற ஆலிஸின் கதைகளில் இவ்விருவரின் தாக்கம் ஆரம்பக் காலத்தில் அதிகம் காணப்பட்டது. ஆலிஸின் முதிய தலைமுறையைச் சார்ந்த ஜேன் ஆஸ்டனுடன் அவர் எப்போதும் ஒப்பிடப்பட்டார்.

தனது தாயைப் பற்றிய உணர்வுகள் அவரது வாழ்க்கையைப் பாதித்தன என்று அவர் ஒருமுறை குறிப்பிட்டார்."நாம் வளரும் போது தாயின் தாக்கங்கள் நம்மிடமிருந்து விலகியிருப்பது அவசியம்; ஒரு தாய் தனது ஆசைகள் தேவைகள் ஆகியவற்றுக்காகக் குழந்தைகள் மீது செலுத்தும் அதிகாரம் தவிர்க்கப்பட வேண்டிய ஒன்று. நமது வாழ்க்கையை நாம்தான், நம் தாய் அல்ல, தீர்மானிக்க வேண்டும். நமக்கென்று நாம் விதித்துக் கொள்ளும் நியதிகளையும் எல்லைகளையும் ஒட்டி நடக்க நாம் பிரயத்தனபடாத வரையில் வாழ்க்கை திருப்தி தராத ஓர் போராட்டமாகவே முடியும். இதைத்தான் நான் செய்தேன். எங்கள் குடும்பத்தில் என் தாய் ஓர் அதிகாரம்மிக்க சக்தி வாய்ந்த மனுஷியாக நடமாடினாள். அவளைப் பிரிந்து நான் வந்தது என் முக்திக்காக நான் செய்த முடிவு!"

ஆலிஸின் சிறுபிராயம் இனிமையற்றதாக இருந்தாலும் எழுத ஆரம்பித்ததன் மூலம் தனது தனி உலகைப் படைத்துக் கொண்டார். அங்கு வெளியுலகில் யாரும் செய்யத் துணியாத காரியங்களைச் செய்யும்தனித்தன்மை நிறைந்த பிரகிருதி என்றொரு எண்ணம் தனக்கு ஏற்பட்டு விட்டதாகக் கூறி யிருக்கிறார்.அன்றைய சூழலில் பெண் எழுதுவது என்பது ஆண்களால் மதிக்கப்படாததாயிருந்தது. பெண்களை மதிக்காமலிருந்த சமூகச் சூழ்நிலையை அவர் வெறுத்தார். "இருபத்தி ஐந்து வயதுக்குள் ஒருத்திக்குத் திருமணம் ஆகாவிட்டால் அவள் வாழ்க்கையில் பெரிய தோல்வியை அடைந்தவள்" என்று அன்றைய சமூகம் கருதியதாக ஆலிஸ் கூறினார்.

ஒரு நிகழ்வின் வெவ்வேறு பரிமாணங்களை அவரது சிறுகதைகளில் வெளிப்படுத்தினார். இதனாலேயே அவர் தான் முன்பு எழுதிப் பிரசுரமான கதையையே சில வருடங்கள் கழித்துப் புதிய புனைவாக மாற்றி எழுதும் வழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டார். 'ரீப்பரைக் காப்பாற்று', 'வேட்கை'என்ற இரு சிறுகதைகளை முறையே1998லும்2004லும்இரண்டு வித்தியாசமான கதைகளாக எழுதினார். 'அதிகாரங்கள்'என்னும் கதையை எட்டு கதைகளாக வெவ்வேறு காலங்களில் எழுதினார்! 'வீடு'என்ற கதையை மூன்று விதத்திலும் 'மரக்கட்டை'என்னும் கதையை இரண்டு விதத்திலும் முப்பது வருட இடைவெளியில் திரும்ப எழுதினார்.

'வீடு'கதையில் வரும் பாத்திரங்களின் குணங்கள், கதைக் கரு, கண்ணோட்டம், வார்த்தைகளின் ஒளியமைப்பு, இடைச் சொற்கள், நிறுத்தக்குறிகள் ஆகியவற்றில் பல்வேறு மாற்றங்கள். போதாதென்று கதாபாத்திரங்களும் மாறுகிறார்கள். 1980இல் நடுத்தர வயது, 2009இல் முதியவர். 1980இல் வெளியிடப்பட்ட கதை மூன்று பிரிவுகளை அடங்கியிருந்தது. 2009இல் அது எட்டு பிரிவுகளாக உருவெடுத்து வந்தது!

தன்னுடைய 'விலகல்'தொகுதி வெளிவருவதற்கு முன் ஃப்ரூப் பார்க்க மறுத்துவிட்டார், "மறுபடியும் மறுபடியும் திருத்திக்கொண்டே இருப்பேன்" என்று.

ஆலிஸ், 1980ல் தனது படைப்புகளைக் கல்கரி ஆவணப் பல்கலைக்கழகத்துக்குக் கொடையாக அளித்தார். அவை பல்கலை வளாகத்தில் இருபத்தாறு அடி நீள இடத்தை ஆக்கிரமித்துக் கொண்டன!

"நான் ஒரு குறிப்பிட்ட பிராந்தியத்தைச் சேர்ந்த எழுத்தாளர் என்று பலர் நினைக்கிறார்கள். ஆனால், நான் குறிப்பிட்ட இடத்தை வைத்துத்தான் எழுத வேண்டும் என்று நினைத்து எழுதுவதில்லை. என் சிறுகதைகளில் இடத்திற்கு ஒரு இடம் உண்டு! ஆனால், அது எதேச்சையாக வருவது. பிரயாசைப்பட்டு அல்ல. சமையலறையில் தரையை மூடியிருக்கும் மெருகிட்ட துணியை நீக்கினால் உள்ளே குகைகள் அடர்ந்து கிடப்பதைப்பார்க்கலாம் என்பது உங்களுக்கு ஆச்சரியத்தை அளிக்கிறதா?இதுவரை பார்த்திராத, கேட்டிராத, கேள்வியெழுப்பும் வியப்பைத் தரும் சூழல்களையே நான் என் எழுத்தில் கொண்டு வருகிறேன்" என்று ஒரு பேட்டியில் ஆலிஸ்தெரி வித்தார். இதுவே அவரது சிறுகதைகளின் உயிர்நாடியாக இருப்பதை அவரைத் தீண்டும் இலக்கிய வாசகர் உணருவது நிச்சயம். ●

ஸிந்துஜா<weenvy@gmail.com>

# தென்னிந்தியா ஒருபடி மேல்!

**ராமச்சந்திர குகா**
**தமிழில்: மணி வேலுப்பிள்ளை**

நேருவின்பதவிக் காலத்தில் ஆஸ்திரேலியாவின் தூதராக இந்தியாவில் பணியாற்றியவர் வால்டர் குரொக்கர் (Walter Crocker, 1902-2002); நேருவை நயந்துவந்து, அவருடன் ஒட்டி உறவாடியவர். அதேவேளை கோவா படையெடுப்பு, காஷ்மீர், ஐந்தாண்டுத்திட்டம் குறித்து நேருவைக் கண்டித்தவர். நேரு மறைந்த பிறகு எழுதிய நூலில் குரொக்கர் கூறுகிறார்:

> இந்தியக் குடியரசில் தென்னிந்தியா பெறும் முக்கியத்துவம் மிகவும் குறைவு. இது இந்தியாவுக்கு ஓர் இழப்பு; தென்னிந்தியாவுக்கு இழைக்கப்படும் ஓர் அநீதி. தென்னிந்தியா சில முக்கிய துறைகளில் மேம்பட்டு விளங்குகிறது: அங்கு வன்முறை நிகழ்வது குறைவு; முஸ்லீம்களை வெறுப்பது குறைவு; பல்கலைக்கழகங்களில் ஒழுங்கீனமோ நெறி பிறழ்வோ கிடையாது; கல்வித் தராதரங்கள் சிறந்து விளங்குகின்றன; சிறந்த ஆட்சியும் துப்புரவும் பேணப்படுகின்றன; ஊழல் குறைவு; இந்து மறுமலர்ச்சி வாதம் தென்னிந்திய மக்களுக்கு இனிப்பதரிது" (Walter Crocker,Nehru: A Contemporary's Estimate, Oxford, 1966).





அரை நூற்றாண்டு கழித்து சாமுவேல் போல், கலா சீதராம் ஸ்ரீதர் ஆகிய இருவரும் சேர்ந்து எழுதிய நூலில், தென்னிந்தியா பொருள்வளத்தில் மேம்பட்டுள்ளதை அதிகாரப்பூர்வமான புள்ளிவிவரங்கள் கொண்டு நிறுவியுள்ளார்கள் (Samuel Paul & Kala Seetharam Sridhar, The Paradox of India's North-South Divide, Sage, 2015).

*1960இல் தமிழ்நாட்டில் தனிநபர் வருமானம் உத்தரப் பிரதேச தனிநபர் வருமானத்தை விட 51% அதிகமாய் இருந்தது. 1980தொடக்கத்தில் அந்த வேறுபாடு 39% ஆக குறுகியது. எனினும் பின்வந்த தசாப்தங்களில் தமிழ்நாட்டு தனிநபர்வருமானம் விரைந்து பெருகியது. 2005இல் சராசரி தமிழ்நாட்டுவாசியின் வருமானம் சராசரி உத்தரப் பிரதேசவாசியின் வருமானத்தை விட 128% அதிகமாய் இருந்து, 2021இல் ஏறத்தாழ 300% அதிகமாய் உயர்ந்துள்ளது!*

*அதேவேளை வட இந்திய மாநிலங்களையும் தென்னிந்திய மாநிலங்களையும்ஒப்பிடுமிடத்து, 1960இல் 39%ஆக இருந்த தனிநபர்வருமான வேறுபாடு, 40 ஆண்டுகள் கழித்து, 2000ஆம் ஆண்டில் 101% ஆக அதிகரித்து, 2021இல் 250% அதிகரித்துள்ளது. தற்பொழுது வட மாநிலங்கள் நான்கிலும் ஒருவரின் சராசரி ஆண்டு வருமானம்:* US $*4,000;தென் மாநிலங்கள் நான்கிலும்:*US $10,000!

தென்னிந்தியாவில் தொழிற்கல்வி, மின்வள உற்பத்தி, வீதியமைப்பின் தரமும் பரிமாணமும் அதிகம். உற்பத்தித் துறையில் ஆக்கத்திறனும் வினைத்திறனும் ஓங்க அது வழிவகுத்துள்ளது.

தெற்கில் அரசாங்கப் பாடசாலைகள் திறம்பட நிர்வகிக்கப்படுகின்றன. மாணவர்கள் கல்வியை இடைநிறுத்துவது குறைவு. மருத்துவசாலைகளில் மருத்துவர்களும் மருந்து வகைகளும் அதிகம். தூய குடிநீர் வசதியும் நகர்ப்புற சேரிகளில் துப்புரவான கழிப்பறைகளும் அதிகம்.

*1960இல் கிராமப்புற வறுமை உத்தரப் பிரதேசத்தை விடத் தமிழ்நாட்டில் அதிகமாய் இருந்தது. 1980 முதல் 1990 வரையான காலப்பகுதியில் தமிழ்நாட்டில் கிராமப்புற வறுமை குன்றிவிட்டது.*

*1991இல் இந்தியப் பொருளாதாரக் கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டபொழுது, மிகுந்த தேர்ச்சியும் உடல்நலமும் வாய்ந்த தென்னிந்தியா அத்தகைய கொள்கை மாற்றத்துக்குத் தயாராகவே இருந்தது. 1990 முதல் 2000 வரை தமிழ்நாடு, ஆந்திரப் பிரதேச மாநிலங்களில் ஆலைகளும் எந்திரவியல் கல்லூரிகளும் கணினி*



மென்பொருள் வலயங்களும் மருந்தாக்க நிலையங்களும் பல்கிப் பெருகின.

இன்று இந்தியாவின் பொருள்வளத்தில் தென்னிந்தியா பெருமளவு பங்கு வகிக்கிறது. தென்னிந்திய சமூக, பண்பாட்டு மேம்பாடே அதற்கான காரணம். அதாவது தென்னிந்தியா கல்வியிலும் ஆளுகையிலும் கவனம் செலுத்தியமை ஒரு காரணம்; இந்துத்துவ மறுமலர்ச்சி வாதத்தில் புலன் செலுத்தாமை மறு காரணம்.

தென்னிந்திய விருத்திக்கு இந்து-முஸ்லீம் அமைதி துணைநிற்கிறது. உத்தரப் பிரதேசமும் பீகாரும் இடைவிடாமல் இன மோதல்களிலும் சாதி மோதல்களிலும் ஈடுபட்டிருந்தன. இந்துத்துவ கொடூரங்களை ராம்ஜன்மபூமி இயக்கம் கட்டவிழ்த்துவிட்டது. தென்னிந்தியாவில் அது எடுபடவில்லை. இந்திய-பாகிஸ்தானியப் பிரிவினையின் கொடூரங்களைத் தென்னிந்தியா பட்டறியவில்லை; கடுப்பும் கசப்பும் மிகுந்த பிரிவினையின் பின்விளைவுகளிலிருந்தும் தென்னிந்தியா தப்பிக்கொண்டது.

தென்னிந்திய சமூக சீர்திருத்தமும் இங்கு குறிப்பிடத்தக்கது. அந்தணரின் ஆதிக்கத்துக்கு எதிரான முழக்கம் வேளைக்கே தென்னிந்தியாவில் எழுந்துவிட்டது. ஸ்ரீ நாராயண குரு, பெரியார் போன்ற சிந்தனையாளர்கள் சாதி, பால்மை விடயங்களில் பெரிதும் சரிநிகரான அணுகுமுறை ஓங்க வழிவகுத்தார்கள். உழுகுலத்தின் உள்ளிருந்து கூட தொழில்முனைவோர்கள் உதித்தார்கள். பெருந்தொகையான பெண்களுக்கு வேலைவாய்ப்பு கிடைத்தது. இது ஒன்றும் தற்செயலாக நிகழவில்லை; நெடுங்கால சமூக சீர்திருத்த இயக்கங்களின் பெறுபேறாகவே நிகழ்ந்தது.

வடக்கை விட தெற்கில் ஆயுட்காலமும் பெண்களின் கல்வி அறிவும் அதிகம்; சிசு இறப்பு குறைவு. பொருள்வளத் துறைக்கு உகந்த உடல்நலமும் கல்வியறிவும் மிகுந்தவர்கள் தென்னிந்தியாவில் அதிகம்.

“இந்தியாவில் வடக்கிற்கும் தெற்கிற்கும் இடைப்பட்ட பாரிய வேறுபாடு பால்மை உறவிலேயே காணப்படுகிறது” என்கிறார் அலிஸ் எவன்ஸ் (Alice Evans) என்னும் சமூகவியலர். “தென்னிந்தியப் பெண்குழந்தைகள் உயிர்தப்பி வாழ்வதும்; கல்வி கற்பதும் தமது கணவரைத் தாமே தேர்ந்தெடுப்பதும்; காலந்தாழ்த்தி மணம் முடிப்பதும்; கணவருடன் ஒட்டி உறவாடி, பிள்ளைகளை குறைத்து, சொத்தினைப் பெருக்கி, சீதனத்தைக் கட்டுப்படுத்துவதும்; பிறருடன் நட்புக்கொண்டு, தத்தம் சமூகத்தவரிடையே தாராளமாக உறவாடுவதும்; ஆண்களுடன் சேர்ந்து பணியாற்றுவதும் அதிகம்” என்கிறார் அவர்.

வட இந்தியாவை விட தென்னிந்தியாவே தேசிய பொருளாதாரத்துக்கும் இந்திய ஒன்றிய அரசிற்கும் பெருந்தொகை அளித்துவருகிறது. தென்னிந்திய மக்கள் உடல்நலம், நல்லுணவு, வாழ்க்கை வளம், உயர்கல்வி வாய்ப்புகளுடன், அரச சேவைகளை எளிதில் பெற்று வாழ்ந்து வருகிறார்கள். வடமாநில மக்கள் கூட அதை எல்லாம் புரிந்து கொண்டுள்ளார்கள். ஆதலால்தான் அவர்கள் தெற்கு நோக்கி நகர ஒற்றைக் காலில் நிற்கிறார்கள்.



நான் வாழும் பெங்களூரில் இந்து-கங்கை சமவெளியைச் சேர்ந்தவர்கள் தொழில் முனைவோர் களாக விளங்குகிறார்கள். வடபுல லக்னோ மாநகரில் தமிழ், கன்னட, மலையாள தொழில்முனைவர்கள் எவரும் நிலைகொண்டுள்ளதாக நான் நினைக்கவில்லை. மத்திய வகுப்பினரும் தொழிலாளரும் வடக்கிலிருந்து தெற்கு நோக்கிப் பெயர்வதே அதிகம்; தெற்கிலிருந்து வடக்குநோக்கிப் பெயர்வது மிகக்குறைவு.

தென்னிந்தியாவின் சிறப்பினை புரிந்து கொள்வதற்கு, வெறுமனே கடந்த தசாப்தங்களை நோக்குவதை விடுத்து, கடந்தநூற்றாண்டுகளை நோக்க வேண்டும்: தென்னிந்தியா கடல் சூழ்ந்த ஆள்புலம்; வெளிநாட்டவர்கள் அதைக் கைப்பற்றுவோராக வரவில்லை; வணிகராகவும் பயணிகளாகவுமே வந்தார்கள்; அவர்களைத் தென்னிந்தியா இன்முகம் கொண்டு வரவேற்றது.

எனினும் தென்னிந்தியா முழு நிறைவானதல்ல; தமிழ்நாட்டின் சில பகுதிகளில் அதன் மாநில, அரசியல்பண்பாட்டுக்குஇழுக்குண்டாகும்வண்ணம் தலித்துக்கள் கொடுமைகளுக்கு உள்ளாகின்றார்கள். கர்நாடகாவில் சமூக, அரசியல் வாழ்வில் இந்துத்துவம் உறுதிப்பட ஊடுருவி வருகிறது. அதன் விளைவுகள் கசக்கின்றன. 1960இல் தென்னிந்தியாவில் ஊழல் குறைவாகவே இருந்தது. இன்று சுரங்க அகழ்வு மற்றும் கீழ்க்கட்டுமான ஒப்பந்தங்கள் செய்வதில் ஐதராபாத், பெங்களூரு, சென்னை மாநகர அரசியல்வாதிகள் வடமாநில அரசியல்வாதிகளைப் போல், அல்லது அவர்களை விட அதிகமாக, இலஞ்சம் வாங்கி வருகிறார்கள்.

இந்தியக் குடியரசின் அரசியல் வாழ்வில் தென்னிந்தியா வகிக்கும் பங்கு தொடர்ந்தும் தாழ்ந்த நிலையிலேயே இருந்து வருகிறது. இனிஅது மேலும் தாழக்கூடும். இந்திய மக்களவைத் தொகுதிகளை குடித்தொகையின்படி மீட்டியமைக்கும் திட்டம் ஒன்று தீட்டப்பட்டுள்ளது. அவ்வாறு மீட்டியமைக்கப்பட்டால், தத்தம் மக்களுக்கு ஓரளவு நற்பணியாற்றும் கேரள, தமிழ்நாட்டு மாநிலங்கள் இந்திய ஒன்றிய அரசின் கொள்கைகளிலும் முதன்மைத் திட்டங்களிலும் கொண்டுள்ள அற்பசொற்ப செல்வாக்கு மேலும் குன்றிவிடும். மறுபுறம், தத்தம் மக்களுக்கு ஏனோதானோ என்று வெறுக்கத்தக்க விதமாகப் பணியாற்றும் உத்தரப் பிரதேசம், பீகார் போன்ற மாநிலங்கள் இந்திய ஒன்றிய அரசின் கொள்கைகளிலும் முதன்மைத் திட்டங்களிலும் ஏற்கெனவே கொண்டுள்ள வலுத்த செல்வாக்கு மேலும் பெருகும்.

அத்தகைய ஏற்றத்தாழ்வினால், ஏற்கெனவே நொந்துபோயுள்ள இந்திய இணைப்பாட்சி முறைமை மேலும் பளுவுக்கும் நெருக்கடிக்கும் உள்ளாகும். ●

*நன்றி:* Ramachandra Guha, Ahead of the Curve, The Indian Telegraph, 2021-06-19

**மணி வேலுப்பிள்ளை**<manivelupillai@hotmail.com>

# பனிக்காலங்களில் வாழ்பவன்

**எம். ரிஷான் ஷெரீப்**



உறைபனியின் பாடல்

கம்பளிக்காக அகற்றப்பட்ட செம்மறிகளின் மயிர்கள்
வளர்ந்திருக்கின்றன மீண்டும்

பின்னப்பட்ட ஆடைகளைப் போர்த்திக் கொண்டவர்கள்
பனிக்காலங்களை தாம்
செம்மறிகளால் துரத்துவதாகக் கூறி
சிலிர்த்துக் கொள்கிறார்கள்

உறைபனி
எங்கும் விழுகிறது
வீழ்ந்தும் உறைகிறது
உறைபனியின் பாடல்

பனித் திரையின் பாடல்

எரி நட்சத்திரம் வீழும் இரவுகளில்
உறைபனி பேசும் மௌன பாஷை கேட்டுச் சிலிர்க்கும்
அவன்
பனிக் காலங்களில் வாழ்பவன்

இராக் கணங்களை நினைவூட்டுகிறது
குளிர் கால வானின்
பகலிலும் மறையாத நிலா

பனியே மேகம்
பனியே யாகம்
பனியே யாவும்
பனியே அவன்

பனிச் சாரலின் பாடல்

பனிக் காலத்தில்
பண்ணை வீட்டின்
பலகைக் கதவு
பனித் திரையைச் சூடிக் கொள்கிறது

பனிச் சாரல்
பூனையை சோம்பலில் தள்ளுவதாக
முறைப்பாடு செய்யுமவன்
கதவருகே உறங்குமதன் தேகத்தில்
பனித் துகள்களை உதிர்க்கிறான்

சிலிர்க்கிறது
பனிக்காலம்
இலக்கு பூர்த்தியான
ஆத்ம திருப்தியில்
விடைபெற்றுச் செல்கிறது

பனிக் காலத்தில் வாழ்பவனின் பாடல்

அடுத்த குளிர்காலம் வரும் வரைக்கும்
சிலிர்த்து வாழ்ந்திட
அந்தப் பூனை தேகத்தில்
தேங்கியிருக்கும் பனிக் காலம்
போதுமாக இருக்கும் அவனுக்கு
எப்போதும்

**எம். ரிஷான் ஷெரீப்**
<mrishansh@gmail.com>

# நாய்களின் குரைப்பு

## சுப்ரபாரதிமணியன்

நாய்களின் குரைப்பு சப்தம் அமைதியாக இருந்த அந்த நீண்ட வீதியை ஒருவகையில் தடுமாறச் செய்தது. ஐந்தாறு நாய்கள் சேர்ந்துகொண்டு அலைகின்றன; ஏதாவது ஒரு இடத்தில் நிற்பதும், ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு குரைப்பதும், பிறகு நான்கு பேர் சேர்ந்து ஒருவரை துரத்திக்கொண்டு போவதும் நடந்து கொண்டிருந்தது. அவ்வப்போது பின்புறத்தையோ உடம்பையோ ஒன்றையொன்று முகர்ந்து பார்த்துக் கொண்டன.

ரவிச்சந்திரன் நாய்க் குரைப்பை மனதில் கொண்டு அறையிலிருந்து வெளியே வந்து பார்த்தபோது வீதி நிசப்தமாயிருந்தது.

சின்ன இடைவேளைக்குப் பின்னால் அவை மீண்டும் தொடர்ந்து குரைத்துக் கொண்டிருந்தன. ஏதோ பெரிய பிரளயம் வந்துவிடுவது போல அவை முன்னேற்பாடாக உரத்த குரைப்பின் மூலம் சொல்லிக்கொண்டிருந்தன.

திடீரென்று ஒரு நாய் கூட இருந்தவற்றை விரட்டியது. இடது பக்க மார்வாடி வீட்டு ரமேஷ், திடுக்கிட்டது போல் வீட்டிற்கு வெளியே வந்து நின்று, நாய்களைப் பார்த்தான். அவன் வலது காலிலிருந்த செருப்பொன்று அவனின் இடது கைக்குச் சீக்கிரம் வந்துவிட்டது. அவற்றின் மேல் எறிய, கொஞ்சம் நகர்ந்து போய் ஆயத்தம் செய்வது போல், நூறு அடி தூரத்துக்குப் பின்னால் இருந்த வேப்ப மரத்தடியொன்றில் நின்று கொண்டான்.

ஒரு நாயைச் சுற்றி ஏகதேசம் வட்டமாய் ஐந்தாறு நாய்கள் சேர்ந்து கொண்டன. அந்த ஒரு நாய்தான் பெண் போலிருந்தது. கூர்ந்து பார்த்தபடி பின்புறத்தை முகர்வதும், கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருப்பதும், பின் பற்களைக் காட்டிக்கொண்டு வெறுப்பைச் சத்தத்தால் வெளியே விட ஆரம்பிப்பது போல் குரைப்பதும் என இருந்தன.

ரமேஷ் எறிந்த செருப்பு தூரத்திற்கு அப்பால் போய் விழுந்தது. நாய்கள் சற்றே சிதறி திசைகள் மாறிப் போயின. இப்போது அவன் தன் வீட்டிற்கு பாதுகாப்பு கிடைத்து விட்டதைப் போல வீட்டுக்குள் சென்றான். செருப்பை எடுப்பதற்காக ஒரு பையன் அது இருந்த இடத்திற்குச் சென்றான். பால் பாக்கெட் கவர்களும் வீட்டுக் குப்பையுமாக அந்த இடம் இருந்தது.



எதிர் வீட்டினுள் இருந்த நாய்களின் குரைப்பு இப்போது ஆரம்பித்தது.

ரவிச்சந்திரன் வீட்டில் குறைந்தது இரண்டு நாய்களாவது இருக்கும். அவற்றை வீட்டுப் பாதுகாப்பு காரணம் கருதி அவர் வளர்த்தார். அவ்வப்போது ஏதோ ஒன்று எப்படியோ குறையும், பிறகு எங்கிருந்தோ ஒரு குட்டியைக் கொண்டு வந்து வளர்ப்பார். உடம்பு சரியில்லாமல் போகிறபோதும், தடுப்பூசிக்கு நோய் கட்டுப்படாத போதும், அவை மெலிந்து தோல் நோய்களைக் காட்டுகிற போதும், ரவிச்சந்திரன் அந்த நாய்களை எங்காவது கொண்டுபோய் விட்டுவிட்டு வருவார். பெரும்பாலும் ஒரு ஆட்டோ பிடித்து சின்னாண்டி பாளையம் பகுதிக்கோ பெரியாண்டிபாளையம் பகுதிக்கோ கொண்டு போய் விட்டுவிட்டு வந்துவிடுவார். அவை திரும்ப வந்துவிடக்கூடாது என்பதற்காகத் தூரமாய் கொண்டு போய்விட்டு விடுவார்.

சின்னாண்டி பாளையம், பெரியாண்டிபாளையம் இரண்டும் வெகு தூரம்தான். அப்புறம் அவை போகிற தடத்தை அறிந்துகொண்டு வீட்டிற்குத் திரும்பி விடும் என்ற ஐயத்தால் ஆட்டோவை வேறு பாதையில் போகச் சொல்லுவார். பெரும்பாலும் அவரின் இரண்டு சக்கர வாகனத்தில் அவற்றைக் கொண்டு போய்விடும் வேலையைச் செய்ததில்லை. பல ஆண்டுகள் பல நாய்களை இப்படிக் கொண்டு போய் விட்டுவிட்டு வந்திருக்கிறார்.

“என்ன ஒரே சத்தமா இருக்கு. அக்கா வேற வீட்லெ இல்ல, சரியா சோறு போடலையா.”

ஹேமச்சந்திரன் அந்த வழியே சென்று கொண்டிருந்தவர் கையிலிருந்த தினசரி செய்தித் தாள்களைக் கக்கத்தில் இடுக்கிக்கொண்டு வீட்டு முகப்பினுள் நுழைந்து ரவிச்சந்திரனைப் பார்த்தார்.

“எங்க போயிட்டு வர்றீங்க.”

“பேப்பர் வாங்கத்தான்.”

“பேப்பரை கூட வீட்டுக்குள்ள கொண்டாறாதீங்க. நான் படிச்சிட்டு வாசலிலேயே போட்டு இருக்கேன். ஒரு ஓரத்தில் போட்டு இருக்கேன்.”

“எதுக்கு, அதுலதான் ஒன்னும் வராதுன்னு சொல்றாங்களே. நாங்க எல்லாத்தையும் மிசின்லே அடிக்கிறோம். மிசின்லேதா பிரிண்ட் அடிக்கிறோம். விக்கிறவன் மட்டும்தான் கையில தொடறான். மற்றபடி எல்லாமே மிசின்லதான்னு சொல்றாங்க.”

“சொல்றாங்க, ஆனா இந்த கொரானா தொத்து வியாதி எங்கிருந்து வேணா தொட்டுட்டு வரும்.




அதனால நியூஸ் பேப்பரை வீட்டுக்குள்ள கொண்டார வேண்டாம். நாம வெளியே போட்டு வைக்கிறதுதான் நல்லது. அப்புறம் அதுல கொலை, கொள்ளை, கற்பழிப்புன்னு மோசமான செய்திகளாக இருக்கும். அது ஊட்டுக்குள்ள வரவேண்டாம், அதுவும் பாதிக்கும்."

"என்ன புதுசா இருக்கு. கொரானாவாலயா இந்தப் பேச்சு. சரி சரி நீங்க சொல்றதும் ஒருவகையில் சரிதான்."

"இத்தனை நேரம் கழிச்சு பேப்பர் வாங்க போய் இருக்கீங்க."

"ஆமா கொரானா காலம் வந்த பிறகு தூக்க நேரம் எல்லாமே மாறிடுச்சு. மெதுவா எந்திரிச்சு போனன். நல்லவேளை பேப்பர் இருந்துச்சு. சரி எங்க அக்காவ காணும்."

"ஊருக்கு போய் இருக்காங்க."

"நல்லவேளை அக்கா ஊரு நம்ம மாவட்டத்திலேயே இருந்தது, தூரமா இருந்தா போய் இருக்க முடியாது."

"ஆமா, ஈ பாஸ் வாங்கணும் அதுக்கும்."

"அதுதான் சரி, இந்த நாய் ஏன் இப்படி சத்தம் போடுது; சாப்பாடு சரியா போடலையா."

"எல்லாம் போட்டதுதா; ரேஷன் அரிசியை சமைத்து போட்டது. ராத்திரியிலகூட ஆக்கிப் போட்டன்."

வீட்டின் பின்னாலிருந்து நாய் ஒன்று குரைத்தது.

"முன்னால இருக்கற வரைக்கும் ரெண்டு இருந்ததே."

"ஆமா. ஒண்ணு நோய் வந்து உடம்பு பூரா புண் ஆயிடுச்சு. வெட்னரி டாக்டர்கிட்டக் கூட்டுட்டுப் போனன். சாப்பாட்டில் மருந்து கலந்து கொடுத்தார். ஒன்னும் சரியா இல்ல. அதுதான் வெளியே கொண்டுபோய் வுட்டுட்டு வந்தன்."

"ரவிச்சந்திரன், அப்புறம் எப்படி இருக்கு நம்மூர் பொழப்பு."

"வேற என்ன, தரித்திரம் போலப் ஆயிருச்சு. லோக்கல் ஐட்டம் எல்லாமே நல்லா ஓடுது. அது எத்தனை நாளைக்கு என்று சொல்ல முடியாது. வெளிநாட்டிலிருந்து ஆர்டர் வருது வருது அப்படிங்கிறாங்க. ஆனா வேலை செய்யறதுக்கு ஆளுக இல்ல. வட நாட்டுக்காரங்க பெரும்பாலும் போ யிட்டாங்க. உள்ளூர் நம்மாளுக வேலை செய்யறதுக்கு முடங்கறாங்க".

"ஆமா, நம்ம ஆளுங்க சரியான கூலி கேப்பாங்க. தங்க இடம் கேப்பாங்க; எல்லாம் கேட்டா முதலாளிகளுக்கு சங்கடமாயிருக்கும்; கோபம் வரும். எவனும் கொத்தடிமையாக இருக்கணும். அவன்தான் உனக்கு வேணும்கறாங்க. ஆமா அப்படி ஒரு கோணம் இருக்கு. என்ன நடக்கும். இந்த ரெண்டு மாசத்துல நிறைய ஆர்டர் வரும். அதுக்கு இப்ப சேம்பல் பண்ணனும். இதை விட்டுட்டா இன்னும் பத்து வருஷம் பின்னால நம்ம ஊரு போயிடும்; மீண்டு வர பத்து வருஷம் ஆயிடும்."

"அப்படி சொல்றீங்களா; ஆமா சாம்பிள் பீஸ் தரணும், சரக்கு அனுப்பனும். காலா காலத்துல பண்ணலைன்னா அவன் வேறொரு நாட்டுக்கு ஆர்டருக்குப் போயிருவான்."

"மற்ற எல்லா நாடுகளிலும் இப்படித்தான்; பங்களாதேஷ், பாகிஸ்தான்னு எங்க கிடைக்கிறதோ அங்கு வேலைக்கு ஆர்டர் கொண்டு போயிட்டு இருக்காங்க. எல்லாம் வேவாரம். இன்ஸ்டண்ட் வேவாரம்."

"சரி இந்த நாய் சத்தம் பெருசா இருக்கு கொஞ்சம் குறைக்கப் பாருங்க."

"அது என்ன டிவியா ரேடியோவா குறைச்சுப் பாக்க. இதுக இந்த மாசம் கூடற மாசம். அதனால நாய்கள் எல்லாம் வெளிய சுத்துது. இதுக்கு அந்த நினைப்பு வந்துடுச்சு. இது வெளிய போகணும்னு சத்தம் போடும் இப்பிடித்தா."

"அதுக்காகதான் சத்தம் போடுதா?"

"ஆமா அதுக்கு பின்னால போய் முகர்ந்து பார்க்கும். கிடைக்குதான்னு அலைஞ்சிட்டு வந்து, கெடச்சுட்டா அப்புறம் சத்தம் போடாது."

"இது சாப்பாட்டுக்கு இல்லாத சத்தம் இல்லையா. அதுக்கு வேற பசி இருக்குல்ல. நம்ம மனுசங்க மாதிரி."

ஹேமச்சந்திரன் கக்கத்தில் இடுக்கி இருந்த தினசரியைக் கையில் எடுத்து, ஒருமாதிரி அலட்சியப் படுத்துவது போல், கையிலிருந்து விலக்கி வைத்துக்கொண்டார்.

அவரின் நடை விரசலான போது ரவிச்சந்திரன் வீட்டு முகப்புக்கு வந்து நின்றார். வீதி ஏகதேசம் வாகனங்கள் எதுவும் இல்லாமல் இருந்தது. நடந்து போகிறவர்களுடைய எண்ணிக்கையும் வெகுவாக குறைந்து போயிருந்தது. அந்த வீதியிலிருந்த நாலைந்து பனியன் கம்பெனிகள் மூடப்பட்டுவிட்டன. மளிகை கடைகள் மட்டும் இரண்டு, எதிரெதிர்

மனிதர்கள் கோபித்துக்கொண்டு இருப்பதைப்போல திறந்திருந்தன.

ரவிச்சந்திரன் கழிப்பறைக்குச் சென்று கதவை மூடிக்கொண்டார். நேற்று வாங்கி வந்த பீர் அதிகமாகத்தான் சிறுநீரை வெளிக் கிளப்பிவிட்டது போலிருந்தது. ஐம்பது ரூபாய் அதிகம் தர வேண்டியிருந்தது. கடைக்கு போய் வரிசையில் நிற்க முடியாது என்று ஒரு பையனை அனுப்பியதில் ஐம்பது ரூபாய் கையிலிருந்து போயிற்று. இன்னும் ஐம்பது ரூபாய் போட்டால் இன்னொரு சிறிய பாட்டில் வாங்கியிருக்கலாம் என்று தோன்றியது. பனியன் கம்பெனியில் வேலை இல்லாத நேரத்தில் இப்படிக் காசு வீணாகிறது.

மெல்ல சிறுநீரை வடித்தபோது ஒருவகை ஆசுவாசம் வந்துவிட்டது அவருக்கு.

கழிப்பறையை ஒட்டிய புங்கைமரம் அருகில் யாரோ நிற்பது போல் இருந்தது. பேசும் குரல் மெல்லக் கேட்டுக் கொண்டிருந்தது. மெல்ல சிறுநீரைக் கழித்து ஆசுவாசத்துடன் தண்ணீரை நிறையத் திறந்துவிட்டார்.

வாசலுக்கு வந்தபோது வீட்டை ஒட்டிய புங்கை மரத்தடியில் இரு பெண்களும் இரு ஆண்களும் நின்றிருப்பது தெரிந்தது. பெண்கள் வசீகரமாக இருந்தார்கள். திரும்பத் திரும்பப் பார்க்கும்படி நேர்த்தியாக இருந்தார்கள்.

உள்ளே போய் கதவுக்கு அருகிலிருந்த நாற்காலியில் உட்கார்ந்துகொண்டார். ஒரு சிகரெட்டை பற்ற வைத்தார். இதற்கே தினமும் நூறு ரூபாய் செலவு செய்ய வேண்டி இருக்கிறது. மனைவி இல்லை என்று தைரியமாக பீர் குடிக்க ஆசை வந்துவிட்டது. அவள் நூறு ரூபாய் சிகரெட் செலவு என்பதையும் சொல்லி என்னதான் திட்டினாலும், ஏதாவது உடம்புக்கு வந்தாலும், இந்த சிகரெட் குடிக்கிறது குறையாது. “உலகமெல்லாம் சொல்லுது கொரானா வரும்னு. தொட்டா வரும் காத்துலெ வரும்ன்னு சொல்றாங்க. அப்போவும் இதுவெ உடமாட்டேங்கிறாங்க.”

“அதெல்லாம் ஒன்னும் இல்ல; என் உடம்பு ஈட்டி மாதிரி, தேக்கு மரம் மாதிரி; எந்தக் குறையும் வராது.”

“ஆமாமா இப்படி வீராப்பு பேசி செத்துப்போனவர்கள் பத்தி எனக்கும் தெரியும்.”

“சரி சரி வாயை மூடிட்டு சும்மா இரு.”

சிகரெட்டை மெல்ல ஊதியபடி வாசலைப் பார்த்தார். தெருவில் வெளிச்சம் அலையாடியது. புங்கை மரத்தடியில் இருந்து இப்போது குரல் தெளிவாகக் கேட்டன.

“எங்க இந்த பக்கம் போயிட்டு இருக்கீங்க.”

“ஏதாவது வேலை கிடைக்குமான்னுதா.”

அந்த இரு பெண்களை மனதில் கொண்டுவந்து பார்த்தார் ரவிச்சந்திரன். இருவரும் அதீத மேக்கப்பில் இருந்தார்கள். நல்ல சேலை உடுத்தி இருந்தார்கள் அவர்களின் வசீகரமான தோற்றம் சாதாரண தொழிலாளர்கள் இல்லை என்பதைச் சொன்னது.

“என்ன வேணும்?”

“வேலை.”

“பனியன் கம்பெனிதான்.”

“சரி.”

“வேலை எல்லாம் இருக்கு.”

“பெரிய அனுபவம் இல்லை.”

“அதுவும் இல்லாட்டி என்ன; கத்துக்க வேண்டியதுதான்.”

“எந்த கம்பெனி.”

“நான் கூட்டிட்டுப் போறேன்.”

அந்த ஆணின் குரல் இப்போது சற்று உரக்கவே இருந்தது.

“வேலை இருக்குமா.”

“இருக்கு”

“எக்ஸ்போர்ட் வேலையா, நாங்க புதுசு.”

“நீங்க புதுசா இருக்கீங்க. நீங்க என்ன எக்ஸ்போர்ட் வேலை பண்ண முடியும். லோக்கல்தான் சரி.”

“அங்க தங்க இடம் இருக்குமா.”

“ஓ.. தங்கிக்கலாம்.”

“சமையல் பண்ணிக்கலாமா.”

“பண்ணிக்கலாம், உங்க கையில சமையல் செய்யற அளவுக்கு என்ன இருக்கு?”

“வெளிய வரும்போது ஸ்டவ்வு, சிலிண்டர், அரிசி, பருப்பு தூக்கிட்டாத் திரிவாங்க.”

“அதுவும் சரிதான்.”

“சரி அந்த பனியன் கம்பெனிக்கு எப்படிப் போகலாம், எப்பப் போலாம்?”

“எப்ப வேணாலும் போகலாம். நான் கூட்டிட்டு போறேன். சரி உங்க நம்பர் குடுங்க.”

“அது அப்புறம். உங்க நம்பர் மொதல்லெ குடுங்க நான் கூப்பிடுறேன்.”

“சரி, குறிச்சுக்கோங்க.”

பரஸ்பரம் எண்களைச் சொல்லிக்கொள்ள அவர்கள் பதிவு செய்துகொண்டார்கள் போல இருந்தது. பிறகு கொஞ்ச நேரம் குசுகுசுக் குரலில் ஏதோ சொல்லிக்கொண்டார்கள். அந்தப் பெண்கள் சாதாரணத் தொழிலாளிகள் போல இல்லை. சற்று வசதியானவர்கள் போல் காட்டிக்கொண்டார்கள்.

“நம்பி வர்லாமா.”

“தாராளமாக.”

பிறகு குரல்கள் மீண்டும் குசுகுசுவென மாறின. ஆடு, மாடு விலை கேட்க, படியவைக்க துண்டைப்போட்டு கைகளை மறைத்து பேரம் பேசுவது போல் இருந்தது.

“கண்டிப்பா வேலை கிடைக்குமில்லே.”

“கிடைக்கும்.”

“தங்க இடம் கிடைக்குமா.”

“எல்லாம் தயார் பண்றேன்.”

“சவுகரியமா இருக்குமில்லையா?”

மீண்டும் குரல்கள் தெளிவற்றதாய் குசுகுசுவென இருந்தன.

அவர்கள் கலைந்து போய் இருக்க வேண்டும். குரல்கள் மெல்ல வலுவிழந்துவிட்டன. நிசப்தமாகிவிட்டது. யார் யாரைத் துரத்துகிறார்கள் என்பது அவரின் கற்பனைக்குள் எட்டவில்லை.

நாய்களின் துரத்தல் ஞாபகம் வந்தது ரவிச்சந்திரனுக்கு. ஓவர்லாக் டெய்லரான தானே சில வாரங்களாய் வேலைக்குப் போகவில்லை. புதிதாய் வருகிறவர்களுக்கு வேலை இருக்கிற மாதிரியா நிலைமை முன்பு போல இருக்கிறது என்று கேட்டுக்கொண்டார்.

ரவிச்சந்திரன் வாசலுக்கு வந்தபோது அவரின் வாசலைத் தாண்டி நான்கைந்து நாய்கள் ஓடிக்கொண்டிருந்தன. மீண்டும் துரத்தலும் ஓட்டமும் ஆரம்பித்து விட்டது போலிருந்தது. அந்த ஆண்களும் பெண்களும் இப்படித்தான் ஓட்டமாய் எங்காவது ஒளிந்து போயிருப்பார்களா.

ஒரு நாயை நான்கு நாய்கள் துரத்திக் கொண்டிருந்தன. காதில் ஓட்டை போட்டு இருந்த நாய்கள் மிகவும் குண்டாகவும் இருந்தன. அவை எல்லாம் நகராட்சியால் பிடித்துக் கொண்டுபோய் ஆண்மை நீக்கப்பட்ட அல்லது பெண்மை நீக்கப்பட்ட நாய்கள். அவை நல்ல பருத்த உருவத்திலிருந்தன. ஒல்லியான ஒரு நாயை அந்த நான்கு நாய்கள் துரத்திக் கொண்டிருந்தன.

கொஞ்ச நேரத்தில் தூரத்தில் கேட்ட குரைப்பு சத்தமும் இல்லாமல் ஆனது.

சட்டென ஒல்லியான பெண் நாய் விரசலாய் அவ்வளவுக்கும் சவால் விடுவது போலச் சென்று கொண்டிருந்தது. மற்ற நாய்கள் துரத்தி கொண்டிருந்தன. காதில் ஓட்டை போட்ட நாய்கள் விடாமல் துரத்துவதாக இருந்தன. அவற்றின் காலடி சத்தம் ஏதோ குழியைப் பறிப்பது போலிருந்தது.

ரவிச்சந்திரன் வீட்டுக்குள் வந்தபோது, வீட்டுக்குப் பின்னால்இருந்த நாயும் முகப்பில் கட்டப்பட்டிருந்த நாயும் பரபரவென்று சங்கிலிகளை அறுத்துக்கொண்டு, வெளியே போவது போலக் கால்களைத் தரையில் வைத்துக் கீற லேசான புழுதி கிளம்பின. வெளியே போகும் அவசரத்தை வெளிக்காட்டின.

வெளியே இருந்ததுபோல மீண்டும் குரைப்பு ஆரம்பித்தது.

“இந்த கெரகங்கள் என்னமோ பண்ணுது” என்றபடி அவர் முன்பக்கமாக இருந்த நாயின் சங்கிலியை விடுவித்தார். அது விரைந்து முன்புற வாசலுக்கு ஓடிவிட்டது.

வீட்டின் பின்புறம் சமையலறை ஓரத்தில் இருந்த அந்த இன்னொரு நாயின் குரைப்பு இப்போது பெரிய அளவிலிருந்தது. அதன் வீச்சு அவரின் காதுகளைச் சிறுமைப் படுத்தியது.

“உன்னையும் உடறன். நீயும் போய் தேடு, நீயும் போ. நான் என்ன பண்ணமுடியும். ஆளக்கொண்டு வந்து சேர்க்கவா முடியும்.”

பின்னால் அந்த நாயும் வேகமெடுத்து, சுவரை ஒட்டிய சந்தில் வெளியே வந்து, வாசலுக்குச் சென்றது. ரவிச்சந்திரன் அந்த வீதியைப் பார்த்தார். வெயில் நிறைந்து நல்ல வெளிச்சத்தைக் காட்டிக்கொண்டிருந்தது.

நாய்களின் குரைப்பும் அவற்றின் நடமாட்டமும் அதிகம் இருந்தது, பயமாகத்தான் இருந்தது. இந்த வெயில் குறைந்த நேரத்தில் இந்த நாய்கள் ஏன் இப்படி ஓடுகின்றன? எப்போது திரும்பும்? திருப்திப்பட்டால்தான் திரும்புமா என்பதை யோசிக்க ஆரம்பித்தார்.

வீடுகளில் விளக்குகளைப் போட ஆரம்பித்தார்கள். வெளிச்சம் தெருக்களில் நிறைந்தது.

மாலையில் அவிழ்த்துவிட்ட இரண்டு நாய்களும் அப்போதும் வரவில்லை. கையிலிருந்த சிகரெட்டை பற்றவைத்துக் கொண்டு வாசலைப் பார்த்து நாற்காலியில் உட்கார்ந்தார். நாற்காலியின் சிதைந்த புட்டப்பகுதிக் கயிறு காற்றில் ஆடியது. அது மெல்ல மெல்லக் குறைந்து போவது போல ஆடி ஒரு நிமிடம் நின்றது

நாய்கள் எப்போது வரும் என்று தெரியவில்லை, காலையில் வெளியே அனுப்பியது. அவை வராமல் கதவைச் சாத்திவிட்டுத் தூங்க முடியாது. காத்திருக்கலாம் என்று தோன்றியது. அவை பாதுகாப்புக்காக வீட்டில் இருக்கின்றன. துளசி இருந்தால் இதைக் கவனித்துக் கொள் என்று சொல்லிவிட்டுத் தூங்கப் போய்விடலாம். இப்போது அவளும் இல்லை. நாய்கள் பாதுகாப்புக்குத்தான் இருக்கின்றன என்று சொல்லிக்கொள்ள ஆரம்பித்தார்.

நாய்களின் குரைப்பு மெல்ல அங்கங்கே கேட்டுக்கொண்டிருந்தது. கூர்மையாக அவரின் காதுகள் அந்தச் சத்தத்தைக் கேட்க ஆரம்பித்தன. ●

**சுப்ரபாரதிமணியன்**
<subrabharathi@gmail.com>

## ழாக் ப்ரெவர்

# இன்றலின் கரும்பலகையில் வரையப்பட்ட மகிழ்ச்சியின் முகம்

### ஷங்கர்ராமசுப்ரமணியன்

முன்னிலையற்ற காதல், குறிப்பிட்ட உருவம், உள்ளடக்கத்தின் பாதை உருவாகாத கவிதை லட்சியம்-இரண்டும் உருவாக்கிய உத்வேகம், மகிழ்ச்சி, ஆற்றலின் குழந்தையாக அப்போது இருந்தேன். வேலை, அந்தஸ்து, பொருள், இணை சார்ந்த விழைவு எனப் புறம் அளிக்கும் நிர்ப்பந்தங்கள் அனைத்தையும் என் சின்ன அகத்தின் வாசலில் செருப்புகளைப் போலத் தைரியமாக, அதேவேளையில் அனிச்சையாகக் கழற்றிப் போட்டிருந்தேன். சற்றே உடல் அளவில் வளர்ந்திருந்த, ஊரிலிருந்து நகரத்துக்குக் கிளம்பிவந்து புதிது கொடுக்கும் எல்லாவற்றையும் பேதம் பார்க்காமல், ஆசையோடும் பரபரப்போடும் நடுக்கத்தோடும் கலாசார விலக்கமாக மொழிபெயர்க்கப்படாத அச்சத்தோடும் வியப்போடும் பருகிக் கொண்டிருந்தேன். அப்போது தமிழ் புதுக்கவிதையில் குழந்தையின் கள்ளமற்ற தன்மையோ, விளையாட்டோ போதுமான அளவு ஏன் பதிவாகவில்லை என்ற கேள்வி எனக்கு இருந்தது.

ஒரு உணவோ, ஒரு நாய்க்குட்டியின் முகமோ, பெயரே தெரியாமல் தெருவின் திருப்பத்தில் நம்மைச் சிறியதொரு வாஞ்சையால் அங்கீகரித்துவிட்டுப் போகும் யுவதியின் வதனமோ கொடுக்கும் தற்செயலான நிறைவு ஏன் தமிழ் கவிதையில் அதிகமாகப் பதிவுசெய்யப்படவில்லை. துயரமும் வலியும் வாழ்வின்மையும் மட்டுமே தமிழ் கவிதையின் ஈர்ப்புடன் தரையிறங்கும் பாதுகாப்பான அடைக்கலமாக உள்ளது என்பதை லக்ஷ்மி மணிவண்ணனும் நானும் உட்கார்ந்தும் நடந்தும் பேசி கோடம்பாக்கம் டிரஸ்ட்புரம் பகுதி தெருக்களை விடியவும் இருளவும் வைத்திருக்கிறோம். அந்தத் தெருக்களில் ஒன்றில்தான் என் கவிதைகளில் ஆரம்பத்தில் தென்பட்ட மாலதி இருந்தாள்.



இந்தச் சமயத்தில்தான் வாழ்வு உண்டு என்று அன்றாடத்தின் போஷாக்கு அத்தனையையும் உட்கொண்ட பிரெஞ்சு கவிஞராக ழாக் ப்ரெவர், சென்னை நுங்கம்பாக்கத்தில் உள்ள அலியான்ஸ் பிரான்சேஸ்வளாக அரங்கத்தில், தனது நூற்றாண்டில் அறிமுகமானார். எனது கலாசார சுரணையையும் நுண்ணுணர்வையும் சினிமாக்கள், புத்தகங்கள், நிகழ்ச்சிகள் வாயிலாக அறிமுகப்படுத்திய இடங்களில் ஒன்று அது. ழாக் ப்ரெவரின் போஷாக்கு மிகச் சரியாக இறங்கிய இன்னொரு தமிழ் கவிஞன் பி.ஆர். மகாதேவன். காத்திரமான ஒரேயொரு தொகுப்பைக் கொடுத்துவிட்டு, கவிதையிலிருந்து அவன் நீங்கி வேறு பாதைகளில் போய்விட்டான். ழாக் ப்ரெவரின் செழுமை இறங்கிய கவிதைகள் 'ஆம் நண்பர்களே அதுதான் நடந்தது'.

இன்றைக்கு இருப்பதைப் போலத் தொலைப்பேசி தகவல்கள், மின்னஞ்சல் தொடர்பு எதுவும் இல்லாமல்தான் அந்த மாலையில் தற்செயலாக அலியான்ஸுக்குப் போய்ச் சேர்ந்தேன். இரண்டாவது மாடியில் சுமார் ஆறரை மணிக்குப் புத்தக வெளியீட்டு நிகழ்ச்சி தொடங்கியது. க்ரியா பதிப்பகம் ஏற்பாடு செய்திருந்த நிகழ்ச்சி அது. க்ரியா ராமகிருஷ்ணனும் மொழிபெயர்ப்பாளர் வெ. ஸ்ரீராமும் அங்கே இருந்தனர். முதலிலேயே ழாக் ப்ரெவர் எழுதிய 'சொற்கள்' கவிதை நூலை வந்திருந்தவர்களுக்குக் கொடுத்தனர். அமரர் ழாக் ப்ரெவரின் கவிதை நூலுக்கு அனுமதி கிடைத்துவிடும் என்று நம்பிக்கையில் வேலைகள் தொடங்கப்பட்டு, ழாக் ப்ரெவரின் இரண்டு மனைவியருக்குள் ஏற்பட்ட வேறுபாடு காரணமாக, முதல் பதிப்பை விலையில்லாத பதிப்பாகவே க்ரியா ராமகிருஷ்ணன் வாசகர்களுக்கு வழங்க முடிவுசெய்திருந்தார் என்பது பின்னர் தெரிந்துகொண்ட தகவல். அமரர் ழாக் பிரெவரின் இரண்டு மனைவிகளுக்குள்ளும் சமரசம் ஏற்பட்டு, அனுமதி வழங்கப்பட்டு அடுத்தடுத்த பதிப்புகள் வெளிவந்து கொண்டிருக்கின்றன.

க்ரியாவின் வழக்கமான நேர்த்தி, அழகுடன் அந்தப் பதிப்பைக் கையில் வைத்துப் பார்த்துத் தீராமல் இருந்தது எனக்கு. அப்போது, பிரெஞ் சிலும் தமிழிலும் ஐந்து கவிதைகளை வெ. ஸ்ரீராம் நூலிலிருந்து தேர்ந்தெடுத்து வாசித்தார். அதில் ஸ்ரீராம் 'பார்பரா' வாசித்தபோது அவர் எப்படி உச்சரித்தார் என்பது இன்னமும் எனக்கு நினைவில் உள்ளது. 'பார்பரா' வழியாக ப்ரெவர் முழுமையாக என்னை அந்த இரவின் ஒளியைப் போலவே ஆட்கொண்டார். ஸ்ரீராமைப் போலவே, அடுத்த சில மாதங்களுக்கு, என் பையில் எப்போதும் வைத்திருந்த 'சொற்கள்' நூலை எடுத்து, அரசாங்க மது விடுதிகளின் வெற்றுத்தரைகளில் எழுந்து நின்று, சக நண்பர்கள் - கவிஞர்களுக்கு தேவாலயத்தில் பிரார்த்தனை செய்யும் பணிவுடன்



*வாசித்துப் பகிர்ந்திருக்கிறேன்.*

*பரிச்சயம் ஆகாத பெயர் மட்டுமே தெரிந்த, ஆனால் வாழ்வின் அடையாளமாக பார்பரா நமக்கு அறிமுகமாகிறாள். போரால் தொலைந்த ஒரு வாழ்க்கையின் அந்திம வேளையில் எங்கே இருக்கிறாய்? என்று கவிதையின் மறுபகுதியில் நினைவு கூரப்படுகிறாள் பார்பரா. கிட்டத்தட்ட ஒரு பாடல் போல இசைத்தன்மை கொண்டது இந்தக் கவிதை.*

நினைவுபடுத்திப்பார், பார்பரா,

ப்ரெஸ்ட் நகரத்தில் அன்று

இடைவிடாமல் மழை பெய்தது

புன்னகையுடன் நீ நடந்து சென்றாய்

மலர்ந்து மகிழ்ந்து நீர் வழிந்தோட

மழையிலே நனைந்து

நினைவுபடுத்திப்பார், பார்பரா

ப்ரெஸ்ட் நகரத்தில் இடைவிடாமல்

மழை பெயதது

சியாம் தெருவில்

உன்னை நான் கடந்து சென்றேன்

நீ புன்னகைத்தாய்

நானும்தான் புன்னகைத்தேன்

நினைவுபடுத்திப்பார், பார்பரா

யாரென்று எனக்குத் தெரிந்திராத நீ

நான் யாரென்பதையும் அறிந்திராத நீ

நினைவுபடுத்திப்பார்

*பிரெஞ்சு பண்பாடு கொடுத்த தனிமனித சுதந்திரம், தாராளம், வாழ்வூட்டம் எல்லாம் கலந்த மனத்தடையற்ற கொண்டாட்டம் ழாக் ப்ரெவரின் கவிதைகள். காதல், காமம், பிறப்பு, மரணம், பிரிவு, குழந்தைமை, விந்தை, குறும்பு எல்லாம் சேர்ந்து சுழித்து நுரைக்கும் அன்றாடத்தின் மது ழாக் ப்ரெவரின் 'சொற்கள்'.*

## பார்க்கத்தான் போகிறீர்கள்

கடலில் நீந்துகிறாள் ஒரு நிர்வாண மங்கை

நீரின் மேல் நடக்கிறார் ஒரு தாடிக்காரர்

எங்கே அந்த அற்புதங்களின் அற்புதம்

மேலுலகத்தில் அறிவிக்கப்பட்ட அதிசயம்?

## வாழ்வின் கதகதப்பு

மேசையின் மேல் ஒரு ஆரஞ்சுப் பழம்

தரைவிரிப்பின் மேல் உன் ஆடை

என் கட்டிலில் நீ

நிகழ்காலத்தின் இனிய வெகுமதி

இரவின் புத்துணர்ச்சி
என் வாழ்வின் கதகதப்பு.

முதல் நாள்

அலமாரியில் வெண்ணிற விரிப்புகள்
கட்டிலில் சிவப்பு விரிப்புகள்
தன் தாயில் ஒரு குழந்தை
அதன் தாய் பிரசவ வலியில்
தந்தை வராந்தாவில்
வராந்தா வீட்டில்
வீடு நகரத்தில்
நகரம் இரவில்
அலறலில் சாவு
வாழ்க்கையில் குழந்தை.

இந்த மூன்று கவிதைகளையும் மீறி ழாக் ப்ரெவரின் உலகம் என்னவென்று மேலும் விரித்துச் சொல்ல வேண்டிய அவசியமில்லை. ஒரு நவீன மக்கள் கவிஞன் எப்படி இருக்க வேண்டுமென்பதற்கு ழாக் ப்ரெவரைப் போன்ற லட்சிய உதாரணம் வேறு இருக்க முடியாது. பாப்லோ நெரூதா அவருக்கு இணையாக உடனடியாக எனக்கு ஞாபகத்துக்கு வருகிறார்.

ழாக் ப்ரெவர் கொடுத்த ஊக்கமும் உற்சாகமும் தற்போது என்னில் மங்கிவிட்ட நிலையில், 'சொற்கள்' தொகுப்பை மீண்டும் எடுத்துப் பார்த்தால், ழாக் ப்ரெவர் நமக்கு அந்நியர் ஆகிவிடுவாரோ என்ற பயத்தில் சில ஆண்டுகளாக அந்தப் புத்தகத்தைத் தொடவே இல்லை. தற்போது இதை எழுதுவதற்காகப் பார்க்கும்போது, என்னை அப்போது ஈர்த்த கவிதைகள் இன்னும் முழுமையாகப் புதுமை மாறாமலேயே இருப்பதை உணர்ந்தேன். குறிப்பாக 'மக்குப் பையன்' கவிதை. தமிழ் நவீன கவிதையின் இருட்டில் சிறுவனின் சிரிப்பை நான் வரைவதற்கு ஊக்கம் தந்த கவிதை அது. வெ. ஸ்ரீராம் அந்தக் கவிதையை அந்தப் பொன் அந்தி மாலையில் படித்தபோது, அந்த மக்குப் பையன் நான்தான் என்று உணர்ந்தேன். அந்த மக்குப் பையனில் என்னை இப்போதும் அடையாளம் காண்கிறேன்.

மக்குப் பையன்

வேண்டாம் என்று தலையை ஆட்டுகிறான்
ஆனால் சரி என்கிறது அவன் இதயம்
அவனுக்குப் பிடித்ததற்கெல்லாம் 'சரி'
ஆசிரியருக்கு 'வேண்டாம்'
நின்றுகொண்டிருக்கும் அவனிடம்
கேள்வி கேட்கப்படுகிறது
எல்லாப் பிரச்சினைகளும்
அவன்முன் வைக்கப்படுகின்றன
திடீரென ஒரு பைத்தியக்காரச் சிரிப்பு
அவனைப் பற்றிக்கொள்கிறது
எல்லாவற்றையும் அழிக்கிறான்
எண்களை சொற்களை
தேதிகளை பெயர்களை
வாக்கியங்களின் சிக்கல்களை
பிறகு ஆசிரியரின் மிரட்டலையும் மீறி
மேதைச் சிறுவர்களின் ஆரவாரத்தினூடே
பல வர்ண பென்சில்களைக் கொண்டு
இன்னல் என்னும் கரும்பலகையில்
அவன் வரைவது மகிழ்ச்சியின் முகம்.

படைப்பு மற்றும் வாழ்க்கையில் ஊக்கமோ நம்பிக்கையோ அற்ற மலட்டுப் பருவத்தைக் கடந்துகொண்டிருக்கும் எனக்கு, ழாக் ப்ரெவரின் 'சொற்கள்' தொகுப்பை எடுத்துப் பார்க்கும்போது, வாழ்வு இன்னொரு தளத்தில் சுரந்து கொண்டிருப்பதைப் பார்க்கும் செயலூக்கத்தைத் தூண்டும் அனுபவத்தை இன்னமும் தருகிறார் ழாக் ப்ரெவர்.

ஆசை, நிராசை, நப்பாசைகளின் வரிகள் கோடுகளாக பள்ளங்களாகச் சுமையேற்றியிருக்கும் அவனது உடலில் உள்ள அலட்சியம் செய்யப்பட்ட சிறுவனை சந்தோஷத்தின் மாயக்குச்சியை வைத்துத் தட்டி தூண்டுகிறார் ப்ரெவர்.

கருத்து, நம்பிக்கை, பந்தம், பிடிப்பு, ஆசை என எல்லாவற்றிலிருந்தும் விடுபட்ட சுதந்திரத்தின் மாயக்குச்சியால் ழாக் ப்ரெவர் உருவாக்குவது மகிழ்ச்சியை. உலகத்தைத் தொட்டுத் தொட்டு தொடாமல், உறவைத் தொட்டுத் தொட்டுத் தொடாமல் மாயத்தை நிகழ்த்தும் கவிதைகள் தான் ழாக் ப்ரெவரின் கலை.

இன்னல் என்னும் கரும்பலகையில் இன்னமும் மகிழ்ச்சிகளின் முகங்களை நானும் அவனும் சேர்ந்து வரையவேண்டும். ழாக் ப்ரெவர் உரைத்ததைப் போல வாழ்க்கையில் தான் குழந்தை இருக்கிறது; வாழ்வின்மையில் அல்ல. அது வாழ்க்கையில் தொடர்ந்து இருப்பதற்குக் காரணம் எந்த அனுபவமும் நிபந்தனையாக்காத சுதந்திரத்தில், அது குழந்தையாக இருப்பதுதான்.

இன்னொரு உலகம் பிறக்காமல், இன்னொரு உலகம் அறிமுகமாகாமல் இருந்த அந்தச் சிறுவனுக்கு அறிமுகமானவர் என்பதால் ழாக் ப்ரெவர் என்ற பெயர் எனக்கு எப்போதும் விசேஷமானதுதான்.

'பார்பரா'வின் தாக்கம்தான் பின்னர் 'வள்ளுவர் கோட்டத்துக்கும் மகாத்மா காந்தி சாலைக்கும் இடையே' கவிதையாக மாறியிருக்க வேண்டுமென்பதை இப்போது ஊகிக்கிறேன்.

வள்ளுவர் கோட்டத்துக்கும்
மகாத்மா காந்தி சாலைக்கும் இடையே

புதிய நிறங்கள்
புதிய புரட்சிகள்
கேஎப்சியில் கோழி வறுபடும் நறுமணம்
காற்றில்
எண்ணைக்கான யுத்தங்கள்
சொல்கிறார்கள்
வனங்கள் அருகிவிட்டன
தண்ணீர் விஷமாகிவிட்டது
புலிகள், குட்டிகள்
தலைகுனிந்து
கடவுளிடம் திரும்பிக்கொண்டிருக்கின்றன
என்று சொல்கிறார்கள்
போக்குவரத்து சிக்னல்களில்
அலை அலையாக யாசிக்கும் பசி
எமது காமத்தைவிட வன்மைகொண்ட
ஆனால்
மென்மையானதும்
நுட்பமானதுமான
ஆடைகள்
உள்ளாடைகள்
நட்பும் காதலும்
சிக்கலும் புதிருமாக மாறிய
அந்தத் திருப்பத்தில்
நாகலிங்க மரநிழலில்
அவன் அவளுக்காகக் காத்திருந்தான்
இன்னும் சில நொடிகளில்
முழுவதும் இருட்டப் போகிறது
அவனை நோக்கி தெற்கிலிருந்து வந்தாள்
அவளின் முகம் தெரியவில்லை
எல்லாம் கோடுகளாகி விட்டன
தூத்துக்குடி
சிங்காநல்லூர்
பிரம்மபுத்ராவின் கரையோரம்
சியரோ லியான்
எந்த முகமாகவும் இருக்கலாம்
புறங்கழுத்திலிருந்து உயரும் காலர்கொண்ட
ஸ்வெட்டர் அணிந்திருந்தாள்
அவள் அவனை நோக்கி வரும்போதே
தோள்களை உயர்த்திவிட்டாள்




அவனும் உற்சாகத்தில்
முன் நகர்ந்தான்
நான் பரவசம் கொண்டேன்
ழாக் ப்ரெவரைப் போல
ஒரு தருணத்துக்குத் தயாரானேன்
அன்றைய மாலையில்
எனக்கு இரண்டாவது நற்செய்தி
அவர்கள் அந்த நாகலிங்க மரத்தின் அடியில்
வள்ளுவர் கோட்டத்திற்கும்
மகாத்மா காந்தி சாலைக்கும் நடுவில்
குதிகாலை உயர்த்தி
ஆரத்தழுவிக் கொண்டார்கள்
இந்தக் கவிதையை நான் இப்படி
இங்கிருந்து எழுத
எனக்கு இத்தனை நூற்றாண்டுகள்
தேவைப்பட்டன. ●

**ஷங்கர்ராமசுப்ரமணியன்**
<shankarashankara@gmail.com>



# கருணாகரன் கவிதைகள்

1

தன்னுடைய குரலில்
பறந்து கொண்டேயிருக்கிறது குயில்
அந்தக் குரலின் தூரமே
அதன் பயணம்
அந்தக் குரலின் இசையே
அதன் நிறம்
அந்தக் குரலின் கனவே
அதனுடைய வாழ்க்கை
அது தன்னுடைய குரலிலேயே
தன்னைத் தீட்டிக் கொண்டிருக்கிறது
குயிலாக
காட்டின் கீர்த்தனையாக
கானகத்துத் தேவதையாக

2

மிக நீண்ட இரவொன்றில்
அவள் தன்னுடைய பெயரை இலைகளால்
எழுதிக் கொண்டிருந்தாள்
அது மரமொன்றாக வளர்ந்து
அவளுடைய உருவில் நின்றது.

அந்த மரமே இந்த உலகின் சாயல்
அந்த மரம் / அவள்
அவளுடைய குருதியின் மணம்
அதன் பிசுபிசுப்பு
ஈரம்
எல்லாமாகி
இறுதியில் இரவானாள்.

பசிய நிறத்தையும் தன் மணத்தையும் குழைத்து
நமக்கான அன்பாக்கி விட்டுச் செல்கிறாள்
அந்த இரவின் ஆழத்துள்ளே.

3

எனக்கென்று எந்த வீடுமில்லை
என்ற துக்கத்தின் மீது நிற்கிறாயா?

யாருடையதோ ஒரு புறக்கணிப்பின் நாக்கு
உன்னைத் தீண்டிக் கொண்டேயிருக்கிறது என
குலைந்து குலைந்து
தீயாகிக் கொண்டிருக்கிறாய்.

அது உன் குருதியின் சுடரல்லவா!

மேலே விரிந்துள்ள கூரையில்
ஒளிர்கின்றனவே ஆகாய விளக்குகள்.
யாரும் தொடமுடியாத அந்த விளக்குகளில்
உன் நம்பிக்கையின் ஒளி சுடர்கிறதே!

அள்ளிக் கொள் அதை.

எங்கோ கேட்கிறது ஒரு மணியோசை
உன்னை அணைக்கும் தாயின் குரலது.
அதைப் பற்றியெழுந்து நில்
அதுவே உன் அன்னையின் ஆசீர்வாதம்.

உதிர்கிறதா இப்போதுன் துக்கத்தின் மணிகள்?
உன்னிதயத்தில் ஒரு இலை துளிர்க்கிறது நண்ப.

4
இந்தப் பச்சை மணம்
உன்னுடையது என்று சொல்வேன்
நிலம் அதை உனக்குப் பரிசளித்திருக்கிறது.
இந்தப் பச்சை மணம்
நதியின் ஈரத்திலிருந்து
அதன் அடியாழத்திலிருந்து முகிழ்த்து வருகிறது.
நதி அதை
வயலுக்கும் புல்வெளிக்கும்
மரங்களுக்கும் பகிர்ந்தளிக்கிறது.
ஏன், நெருப்புக்கும் கூட அதைப் பகிரத் தயாராக உள்ளது.
நதியற்ற பரப்பில்
நிலம் தன் அடியாழ ஊற்றிலிருந்து
அதை மேலெடுத்துப் பரப்புகிறது.

பச்சை மணம்
எப்போதும் எங்கோ இருந்து கொண்டேயிருக்கிறது
யானையும் முயலும் அதை எடுத்துச் செல்கின்றன
ஒரு குழந்தை அதை முகர்ந்து பார்க்கிறது.

பச்சை மணம்
ஒளியாகப் பெருகிச் செல்கிறது
நான் அதை ஊடறுத்துச் செல்கிறேன்.

5
எந்த வாசல்களிலும்
இல்லாமற் போனதா
தெரிந்த ஒரு முகம்
போகவும் வரவுமான ஒரு கணம்
சின்னதாக ஒரு காரணம்
அழகியதொரு தோரணம்
சின்னஞ்சிறிய ஒரு மலர்
என்ற தவிப்போடு
அலைகின்றவனை அழைக்கிறது
தொலைவில் ஒரு வாசல்

தொலைவாசலில்
மென்னொளி வீசும் சின்னஞ்சிறிய சுடர்
கையசைத்து
வா என்றழைக்கிறது அவனை.

6
போரின் முள்ளில்
ஆடியது நம்முடைய ஊஞ்சல்
பொறிகளின் மேல் கனவுகளைப் பயிரிட்டோம்
நமது சிலந்தி பின்னிய வலையில்
நாமே பூச்சிகளாகினோம்.

7
அலாவுதீனின் அற்புத விளக்கு
உடைந்து நொருங்க
அடுத்த கணத்தில்
ஒரு பேரற்புதம்
நிகழக் காத்துளது

ஒரேயொரு நொடியில்
சுவரிலிருக்கும் பூச்சியை
வேட்டையாட முனையும் பல்லி

தப்பிப் பறந்து விடக்கூடும் பூச்சி

தவறிக் கீழே விழலாம் பல்லி

நீங்கள் இந்தச் சூழலை மாற்றி விடுவீர்கள்

பல்லி / பூச்சி / நீங்கள் / அந்தச் சூழலும் கணமும்
எல்லாவற்றோடும் ஓடிக் கொண்டிருக்கிறது
ஆடிக்கொண்டிருக்கும் நூலிழை ஒன்று. ●

**கருணாகரன்** <poompoom2007@gmail.com>

# நம்பமுடியாத

# 60%

# விலை குறைப்பு!

## அம்ருதா சந்தாதாரர் ஆகுங்கள்

## அம்ருதா & அட்சரா பதிப்பக வெளியீடுகளை

## 60 % விலை குறைப்பில் பெறுங்கள்

- அம்ருதா தனி இதழ் ரூ. 25, ஆண்டு சந்தா ரூ. 275, இரண்டு வருட சந்தா ரூ. 550, ஐந்து வருட சந்தா ரூ. 1300
- அம்ருதா ஆயுள் சந்தா ரூ. 5000
- சந்தா செலுத்துவது தொடர்பாக விவரம் பெற +91 94440 70000 என்ற எண்ணுக்கு அழைக்கவும். அல்லது குறுஞ்செய்தி / வாட்ஸ் அப் செய்தி அனுப்பினால் நாங்கள் தொடர்புகொள்கிறோம். info.amrudha@gmail.com மின்னஞ்சல் முகவரி மூலமாகவும் தொடர்புகொள்ளலாம்.
- சந்தா தொகையை அம்ருதா முகவரிக்கு, White Lotus Books (P) Ltd என்ற பெயருக்கு காசோலையாகவோ வரைவோலையாகவோ அனுப்பலாம்
- காசோலை / வரைவோலை அனுப்புபவர்கள் தங்கள் பெயர், முகவரி, தொலைப்பேசி எண் குறிப்பிடவும்.







---

**அம்ருதா, 1 கோவிந்த் ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 இரண்டாவது தெரு, மூன்றாவது பிரதான சாலை, சிஐடி நகர் கிழக்கு, நந்தனம், சென்னை - 600035**

#  அம்ருதா பதிப்பகம் வெளியீடுகள்

முத்துக்கள் பத்து வரிசை நூல்கள்
சிறந்த எழுத்தாளர்களின் தேர்ந்தெடுத்த 10 சிறுகதைகள்

**பி. எஸ். ராமையா**
பக். 80, விலை ரூ. 50

**புதுமைப்பித்தன்**
பக். 48, விலை ரூ. 30

**ந. பிச்சமூர்த்தி**
பக். 80, விலை ரூ. 50

**எம். வி. வெங்கட்ராம்**
பக். 64, விலை ரூ. 50

**லா. ச. ரா**
பக். 80, விலை ரூ. 50

**கல்கி**
பக். 96, விலை ரூ. 60

**தி. ஜ. ர**
பக். 80, விலை ரூ. 50

**தி. ஜானகிராமன்**
பக். 96, விலை ரூ. 60

**ஜெயகாந்தன்**
பக். 64, விலை ரூ. 40

**கு. அழகிரிசாமி**
பக். 96, விலை ரூ. 60

**அசோகமித்திரன்**
பக். 64, விலை ரூ. 40

**சா. கந்தசாமி**
பக். 112, விலை ரூ. 70

**ஆ. மாதவன்**
பக். 80, விலை ரூ. 50

**ஆதவன்**
பக். 96, விலை ரூ. 60

**பிரமிள்**
பக். 96, விலை ரூ. 60

**வண்ணநிலவன்**
பக். 64, விலை ரூ. 40

**வண்ணதாசன்**
பக். 64, விலை ரூ. 40

**நாஞ்சில்நாடன்**
பக். 80, விலை ரூ. 50

**ராஜம் கிருஷ்ணன்**
பக். 112, விலை ரூ. 70

**விட்டல்ராவ்**
பக். 64, விலை ரூ. 40

**பா. செயப்பிரகாசம்**
பக். 160, விலை ரூ. 100

**நீல. பத்மநாபன்**
பக். 80, விலை ரூ. 50

**தமிழ்ச் செல்வன்**
பக். 64, விலை ரூ. 40

**கந்தர்வன்**
பக். 80, விலை ரூ. 50

**கோணங்கி**
பக். 64, விலை ரூ. 40

**சூர்யகாந்தன்**
பக். 64, விலை ரூ. 40

**ஜெயந்தன்**
பக். 160, விலை ரூ. 100

**மொழிபெயர்ப்பு நாவல்கள்**
**மிருகங்களின் பண்ணை**
ஜார்ஜ் ஆர்வெல்
பக். 120, விலை ரூ. 75

**பாரதிபுரம்**
யு.ஆர். அனந்தமூர்த்தி
தமிழில்: தி.சு. சதாசிவம்
பக். 240, விலை ரூ. 150

**பிறவாத குழந்தைக்கு ஒரு கடிதம்**
ஓரியானா ஃபேலஸி
தமிழில்: திலகவதி
பக். 144, விலை ரூ. 90

**பெண்ணே கேள்**
கிருஷ்ணா ஸோப்தி
தமிழில்: நா. தர்மராஜன்
பக். 112, விலை ரூ. 70

**சிதைந்தகூடு**
தாகூர்
பக். 80, விலை ரூ. 50

**நெருப்பு நிலா**
வாசி ரெட்டி சீதா தேவி
பக். 160, விலை ரூ. 100

**ஒரு லாரி டிரைவரின் கதை**
சிங்கிஸ் ஐத்மாத்தவ்
தமிழில்: தா. பாண்டியன்
பக். 128, விலை ரூ. 80

**மாயாபுராணம்**
பி. சுரேந்திரன்
தமிழில்: திலகவதி
பக். 144, விலை ரூ. 90

**மொழிபெயர்ப்பு சிறுகதைகள்**
**சல்வடார் டாலி**
உலகச் சிறுகதைகள்
தேர்வும் தொகுப்பும்: திலகவதி
பக். 192, விலை ரூ. 120

**குதிரில் உறங்கும் இருள்**
பாப்லோ நெருடா
பக். 112, விலை ரூ. 70

**ஒரு வார்த்தையின் பொருள்**
ப்ரஃபுல்லா ராய்
வங்காளத்தில் இருந்து: புவனா நடராஜன்
பக். 224, விலை ரூ. 140

**அண்மைக்கால வங்காளச் சிறுகதைகள்**
தமிழில்: சு. கிருஷ்ணமூர்த்தி
பக். 240, விலை ரூ. 150

**அன்புள்ள பிலாத்துவுக்கு**
பால் சக்கரியா. தமிழில்: திலகவதி
பக். 96, விலை ரூ. 60

**யௌவனத்தின் கடல்**
நவீன மலையாள சிறுகதைகள்
தேர்வும் மொழிபெயர்ப்பும்: குளச்சல் மு. யூசுப்
பக். 288, விலை ரூ. 180

**உள்ளுக்குள் ஓடும் ஆறு**
வடகிழக்கு இந்திய சிறுகதைகள்
தேர்வும் மொழிபெயர்ப்பும்: வெ. இன்சுவை
பக். 144, விலை ரூ. 90

**மண்வாசல்**
பிரேம்சந்த்
தமிழில்: ரமேஷ்குமார்
பக். 96, விலை ரூ. 60

## சிறுகதைகள்

**சித்திரக்கூடம்**
லஷ்மி மணிவண்ணன்
பக். 128, விலை ரூ. 80

**அன்னை தந்த ஒளி**
பெ. தூரன்
பக். 80, விலை ரூ. 50

**அறிஞர் அண்ணா சிறுகதைகள்**
தேர்வும் தொகுப்பும்: திலகவதி
பக். 160, விலை ரூ. 100

**அவள் அதுவானாள்**
பா. விசாலம்
பக். 80, விலை ரூ. 50

**வான்கோவின் காது**
கீதாஞ்சலி
பக். 112, விலை ரூ. 70

**பழைய காலண்டரில் இருதினங்கள்**
பாலு சத்யா
பக். 128, விலை ரூ. 80

**மீண்டெழுதல்**
இல. வின்செண்ட்
பக். 128, விலை ரூ. 80

**வண்ணத்துப் பூச்சிகளும் பெண்களும்**
சூர்யகுமாரன்
பக். 120, விலை ரூ. 75

## நாவல்

**சுகுண சுந்தரி சரித்திரம்**
வேதநாயகம் பிள்ளை
பக். 112, விலை ரூ. 70

**முள்ளும் மலரும்**
உமா சந்திரன்
பக். 288, விலை ரூ. 180

**டணாயக்கன் கோட்டை**
இ. பாலகிருஷ்ணநாயுடு
பக். 480, விலை ரூ. 300

**அசன்பே சரித்திரம்**
எம்.சி. சித்திலெவ்வை
பக். 128, விலை ரூ. 80

**ஓடும் நதி**
சுப்ரபாரதிமணியன்
பக். 240, விலை ரூ. 150

**சாகசப் பறவைகள்**
எஸ்ஸாரெஸ்
பக். 180, விலை ரூ. 90

## கட்டுரைகள்

**இந்தியா - மர்மமும் சவாலும்**
இ.எம். பாஸ்டர்
தமிழில்: நா. தர்மராஜன்
பக். 192, விலை ரூ. 120

**உலகை மாற்றிய புத்தகங்கள்**
ராபர்ட் டவுன்ஸ்
பக். 240, விலை ரூ. 150

**ஜெயகாந்தன் சிந்தனைகள்**
தேர்வும் தொகுப்பு: திலகவதி
பக். 112, விலை ரூ. 70

**தமிழகக் கோட்டைகள்**
விட்டல்ராவ்
பக். 240, விலை ரூ. 150

**என் பார்வையில் படைப்பிலக்கியம்**
முருகேச பாண்டியன்
பக். 240, விலை ரூ. 150

**என்றென்றும் வாழும் படைப்புகளும் படைப்பாளர்களும்**
எம்.ஏ. அப்பாஸ்
பக். 112, விலை ரூ. 70

**மூச்சுத் திணறுது பூமி**
மருத்துவர் வி. ஜீவானந்தம்
பக். 120, விலை ரூ. 75

**பெண்ணொன்று கண்டேன்**
பாமரன்
பக். 112, விலை ரூ. 70

**ஆரிய உதடுகள் உன்னது**
பாமரன்
பக். 64, விலை ரூ. 40

**சொல்லப்படாத உலகம்**
யமுனா ராஜேந்திரன்
பக். 96, விலை ரூ. 60

**பாலமாகி நிற்கும் பணி**
யமுனா ராஜேந்திரன்
பக். 160, விலை ரூ. 100

**ஈழத்து அரசியல் நாவல்**
யமுனா ராஜேந்திரன்
பக். 112, விலை ரூ. 70

**திரைப்படங்களான இலக்கியங்களும் நாடகங்களும்**
அறந்தை மணியன்
பக். 128, விலை ரூ. 80

**திரைவெளி**
சுப்ரபாரதிமணியன்
பக். 128, விலை ரூ. 80

**அசோகமித்திரன் 77**
சுப்ரபாரதிமணியன்
பக். 144, விலை ரூ. 90

**நெஞ்சு பொறுக்குதில்லையே**
சாவித்திரி கண்ணன்
பக். 192, விலை ரூ. 120

**கிட்டத்தட்ட கடவுள்**
சி. சரவணகார்த்தியேன்
பக். 154, விலை ரூ. 135

**பாம்பின் கால்த்தடம்**
பிரபு திலக்
பக். 200, விலை ரூ. 125

**பறை**
மருத்துவர் எம். வளர்மதி
பக். 144, விலை ரூ. 90

**தமிழ்ச் சூழலில் அறிவியல் புதினங்கள்**
நெல்லை சு. முத்து
பக். 192, விலை ரூ. 120

**மிக அருகில் மிருகம்**
மருத்துவர் ஆர். கோவிந்தராஜ்
பக். 128, விலை ரூ. 80

## கவிதை

**விக்ரமாதித்யன் கவிதைகள்**
தேர்வும் தொகுப்பும்: வித்யாஷங்கர்
பக். 560, விலை ரூ. 350

**சொட்டுச் சொட்டாய் விழுகின்றன செவ்வரளிப் பூக்கள்**
என்.டி. ராஜ்குமார்
பக். 80, விலை ரூ. 50

**காதலியர் மேன்மை**
தபசி
பக். 160, விலை ரூ. 100

## திரைக்கதை

**இம்சை அரசன் 23ஆம் புலிகேசி**
சிம்பு தேவன்
பக். 160, விலை ரூ. 100

**ஆட்டோகிராப்**
சேரன்
பக். 208, விலை ரூ. 130

## நாடகம்

**முன்மேடை**
அ. ராமசாமி
பக். 144, விலை ரூ. 90

**கள்ளத் தோணி**
எம்.ஏ. அப்பாஸ்
பக். 112, விலை ரூ. 70

## வாழ்க்கை வரலாறு

**பகவான் மகாவீரர் வாழ்க்கை வரலாறு**
ஏ.எல். நடராஜன்
பக். 240, விலை ரூ. 150

## சுய முன்னேற்றம்

**வாழ்க்கை வாழ்வதற்கே**
மருத்துவர் திருநாவுக்கரசு
பக். 160, விலை: ரூ. 210

**மனம்**
மருத்துவர் எம். திருநாவுக்கரசு
பக். 112, விலை ரூ. 70

**போதை?**
மருத்துவர் எம். திருநாவுக்கரசு
பக். 160, விலை ரூ. 100

**வெற்றிப்பாதை**
சுரேஷ்குமார்
பக். 128, விலை ரூ. 80

## திலகவதி நூல்கள்

**கல்மரம்**
சாகித்திய அகாதமி விருது பெற்ற நாவல்
பக். 96, விலை ரூ. 60

**உனக்காகவா நான்**
நாவல்
பக். 80, விலை ரூ. 50

**நேசத்துணை**
நாவல்
பக். 128, விலை ரூ. 80

**சொப்பன பூமியில்**
நாவல்
பக். 104, விலை ரூ. 65

**தமிழ்க் கொடியின் காதல்**
நாவல்
பக். 144, விலை ரூ. 90

**மூங்கில் திரை**
சிறுகதைகள்
பக். 200, விலை ரூ. 125

**மரப்பாலம்**
சிறுகதைகள்
பக். 200, விலை ரூ. 125

## முத்துக்கள் பத்து

சிறுகதைகள்
பக். 96, விலை ரூ. 60

**தீப்பறவையின் கூடு**
சிறுகதைகள்
பக். 186, விலை ரூ. 120

**சக்கர வியூகம்**
சிறுகதைகள்
பக். 96, விலை ரூ. 60

**தொப்புள் கொடி**
சிறுகதைகள்
பக். 200, விலை ரூ. 125

**உங்களுக்காக உலக சினிமா**
கட்டுரைகள்
பக். 360, விலை ரூ. 225

**காலந்தோறும் அறம்**
கட்டுரைகள்
பக். 96, விலை ரூ. 60

**நபி (ஸல்) நமக்குச் சொன்னவை**
கட்டுரைகள்
பக். 120, விலை ரூ. 75

**சேகுவேரா**
வாழ்க்கை வரலாறு
பக். 80, விலை ரூ. 50

**முடிவெடு**
சுய முன்னேற்ற நூல்
பக். 144, விலை ரூ. 90

**இப்படித்தான் வென்றார்கள்**
கேள்வி-பதில்கள்
பக். 208 , விலை ரூ. 130

**காலத்தின் கண்ணாடி**
தொகுப்பு நூல்
பக். 1200, விலை ரூ. 750

**கோடை உமிழும் குரல்**
தொகுப்பு நூல்
பக். 400, விலை ரூ. 250

---

நூல்களை பெற +91 94440 70000 என்ற எண்ணுக்கு அழைக்கவும். அல்லது குறுஞ்செய்தி / வாட்ஸ் அப் செய்தி அனுப்பினால் நாங்கள் தொடர்புகொள்கிறோம். info.amrudha@gmail.com மின்னஞ்சல் முகவரி மூலமாகவும் தொடர்புகொள்ளலாம்.

அம்ருதா சந்தாதாரர்கள் நூல்களை 60% விலை குறைப்பில் பெற்றுக்கொள்ளலாம்.

நூல்களை சென்னை அம்ருதா அலுவலகத்திலும் புத்தகக் காட்சிகளில் அம்ருதா ஸ்டால்களிலும் நேரிலும் பெற்றுக்கொள்ளலாம்.

---

**அம்ருதா, 1 கோவிந்த் ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 இரண்டாவது தெரு, மூன்றாவது பிரதான சாலை, சிஐடி நகர் கிழக்கு, நந்தனம், சென்னை - 600035**

# காமமும் அதன் மீறல்களும்

**நடேசன்**

தீ - எஸ். பொன்னுத்துரை; விலை ரூ. 120; வெளியீடு: காலச்சுவடு பதிப்பகம், 669 கே.பி.சாலை, நாகர்கோவில் 629001; தொலைப்பேசி: +91 4652 278525; மின்னஞ்சல்: kalachuvadu@sabcharnet.in

கபிரியல் கார்சியா மார்குவசின் 'லவ் இன் த ரைம் ஒவ் கொலரா' (Love in the time of cholera), எனக்கு மிகவும் பிடித்த நாவல். அந்த நாவலை அவுஸ்திரேலியா, விக்டோரியா மாநிலத்தில் உயர்தர வகுப்பினருக்கு (Year 12), ஆங்கில இலக்கியப் பாடப் புத்தகமாக்க விரும்பியபோது, அதற்கு எதிராகப் பலர் போர்க்கொடி தூக்கினார்கள். ஒரு சிறிய சம்பவமே இதற்கான காரணம்: அந்த நாவலில், காதலன் துறைமுகம் அருகே சந்தித்த ஒரு இளம் பெண்ணுடன் உடலுறவு கொள்கிறான். அந்தப் பெண் அப்போது, பல்லை ஒழுங்குபடுத்தும் கிளிப் அணிந்திருந்தாள் என நாவலில் சொல்லப்படுகிறது. பதினெட்டு வயதுக்கு உட்பட்டவர்களே அந்தக் கிளிப்பை அணிவதால், வயது குறைந்த (Underage) ஒரு பெண்ணுடன் உறவு வைத்ததாக அந்த விடயம் பார்க்கப்பட்டது. இது, 'சைல்ட் அபியூஸ்' (Child Abuse) என்ற வகைக்குள் அடங்குவதால், இந்த நாவல் பாடசாலை கல்வித் திட்டத்திலிருந்து விலக்கப்பட்டது.

இந்த நாவலில் கதாநாயகன் நற்குணமானவனாகக் காட்டப்படுவதால் கபிரியல் கார்சியா மார்குவசின் அத்துமீறலாக நான் இதைப் புரிந்துகொள்கிறேன். ஆனால், 'தீ' நாவலில் எஸ். பொன்னத்துரை இளம் சிறுமியுடன் உறவு வைப்பவனை அந்த காமத்தால் அழிபவனாகக் காட்டுவதால், எஸ்.பொவின் 'தீ' நாவலை என்னால் ஏற்றுக்கொள்ள முடிகிறது.

60 வருடங்கள் முன்பாக எஸ்.பொன்னுத்துரையால் எழுதப்பட்ட 'தீ', பலரால் பல கோணங்களில் பேசப்பட்டது. காமத்தைப் பேசும் நாவலாக எழுத்தாளர்களாலும் மறைத்து வைத்து படிக்க வேண்டிய நாவலாக வாசகர்களாலும், கொளுத்தப்பட வேண்டியது என ஒழுக்க சீலர்களாலும் எழுதப்பட்டது. சுருக்கமாகச் சொன்னால் யானையைப் பார்த்த குருடர்களாகவே இந்த நாவலை எல்லோரும் பார்த்தார்கள். எஸ். பொன்னுத்துரை தவிர்த்து யாராவது ஒருவர் இந்த நாவலை எழுதியிருந்தால் இந்த நாவல் தமிழ் உலகில் மேலும் முக்கியப் படுத்தப்பட்டிருக்கும். அதில் சோசலிச யதார்த்தத்தை யாராவது கண்டுபிடித்திருப்பார்கள்.



இந்த நாவலில், காமம் 'தீ'யாக உருவகப்படுத்தப் பட்டுள்ளது. இந்தத் 'தீ', 'எதைமூலப்பொருளாக்கொண்டு எரிகிறதோ, அதை அழித்து முடிவில் சாம்பலாக்கிறது' என்ற படிமத்தின் வடிவமாகக் காட்டப்பட்டுள்ளது. அதைப் பலர் புரிந்துகொண்டார்களா என்பது கேள்வி.

நாவலில் பல பெண்களுடன் உடலுறவில் ஈடுபட்ட நாயகன், இறுதியில், திலகா என்ற ருதுவாகாத இளம் பெண்ணை, அதுவும் ஒரு ஆசிரியராக இருப்பவன், உறவு வைக்கும் பகுதி வரும்போது என்னால் தொடர்ந்து படிக்க முடியவில்லை. சிறுவயதில் சிறார்களின் பாலியல் உறவுகளை ஏற்றுக்கொள்ளும் எனது மனதால், இங்கே ஒரு குருவாக, பிள்ளைகளுக்கு ஒழுக்கத்தைப் போதிக்கும் பொறுப்பில் உள்ளவர் நடந்துகொண்ட விதத்தை ஏற்க முடியவில்லை.

ஆனால், சற்று யோசித்தால், இவை நடக்காதவையா? அல்லது நாம் கேள்விப்படாத விடயங்களா? ஆசிரியர்கள், வைத்தியர்கள் என்போர், அவர்களுக்குப் பதவிகள் அளித்த மரியாதையையும் சந்தர்ப்பத்தையும் காலாதிகாலமாகத் துஷ்பிரயோகம் செய்வதில்லையா?

நாவலில் நம்பகத்தன்மை இருக்கவேண்டும்; பாத்திரப் படைப்பு செறிதாக இருக்கவேண்டும்; பாத்திரத்தின் செய்கைகள் மற்றும் மன ஓட்டங்களுக்குக் காரணங்கள் கற்பிக்கவேண்டும். இவை இந்த நாவலில் உள்ளன.

யோசப்சாமியாரால் விடுதியில் வைத்து ஒரு சிறுவனது அப்பாவித்தனம் சூறையாடப்பட்டு, வக்கிரம் விதைக்கப்படுகிறது. இது கூட வெகு சாதாரணமாகக் கல்லூரி விடுதி மற்றும் குருத்துவப் பாடசாலைகளில் நடக்கும் விடயங்கள். ஆண் சிறுவர்கள் சூறையாடப்படும்போது அவர்கள் கருக்கொள்ளாததால் சமூகத்தில் அது பெரியதாக எடுத்துக்கொள்ளப் படுவதில்லை. கண்ணுக்குத் தெரியாதவற்றை நாம் கணக்கில் எடுப்பதில்லை, கடவுளைத் தவிர! ஆனால்,

படம்: பாலுமகேந்திரா

இப்படி சூறையாடப்பட்டவர்கள் பிற்காலத்தில் சூறையாடியவர்களின் புதிய பதிப்பாகிறார்கள். அப்படியான ஒருவரே 'தீ'யின் கதாநாயகன்.

உண்மையான வரலாற்றைப் படித்து, நாம் புரிந்துகொள்வதன் மூலம் சமூகத்தை பரிந்துகொள்ள முடியும். ஆனால், இலக்கிய புனைவுகளே தனிமனிதர்களின் மனக்குகையின் வக்கிரங்களை அறியவைக்கும் சாதனம். நமது சமூகம் இலக்கியத்தையும் வரலாற்றையும் ஒதுக்கிவிடுவதன் மூலம் நடந்தவை, மீண்டும் நடக்கின்றன.

'தீ'யில் வரும் கதாநாயகன் மட்டுமே இங்கு பேசப்படவேண்டிய ஒரே பாத்திரம். மற்றைய பெண் பாத்திரங்கள் தட்டையானவை. ஒரு பாத்திரத்தின் உறுதியற்ற தன்மை மற்றும் தோல்விகளுக்கு, காமஉணர்வுகளின் மூலம் வடிகால் தேடும் பரிதாபத்துக்குரிய ஆண் பாத்திரமாக உருமாறுவதற்கு, ஊக்கிகளாக வருகிறார்கள்.

'தீ' நாவலில் உள்ள மற்ற முக்கிய விடயம், மனவோட்டங்களின் வழியே கதையின் பெரும்பகுதி சொல்லப்படுவது. இது அக்கால தமிழ் நாவல்களில் அரிது. இதை எஸ்.பொன்னுத்துரை 'சடங்கு' நாவலிலும் பயன்படுத்தியுள்ளார். எந்த புறச் சித்தரிப்புமற்ற நாவலாக வரும் நாவல் இது. பாத்திரத்தின் நினைவில் காமம் நதியாக ஓடியபோது, பல இடங்களில் கரையை மீறுகிறது என்பதாக உருவகிக்க முடியும். இப்படியான நாவல்கள் நம்மிடையே குறைவே.




காமமும் அதன் மீறல்களும், காலம் காலமாகத் தொடரும் என்பதால் எமது தலைமுறையில் மட்டுமல்ல, எதிர்கால தலைமுறையிலும் 'தீ' தொடர்ச்சியாகப் பேசப்படும் செவ்வியல் நாவலாகும்.

'தீ'யில் உள்ள பாலியல் எண்ணங்களை எழுதுவதற்கு கூச்சப்பட்ட எஸ்.பொன்னுத்துரை, வைரமுத்து போல் தேவையற்ற அலங்கார வார்த்தைகளால் இடறுவது நாவலின் குறைபாடு; ஆங்கிலத்தில் இதை 'பேப்பில் புரோஸ்' (Purple Prose) என்பார்கள்.●

**நடேசன்**
<uthayam12@gmail.com>

# "ஐயா, இந்த டயல் சுத்தினா அப்பிடியே நிக்கி!"

**விட்டல்ராவ்**

தொலைப்பேசி அறிமுகமானபோது அழைப்புகளைப் பெறுவதும் பிறருடன் தொடர்புகொள்ளுவதும் டெலிபோன் ஆபரேடர்களின் மூலமாகத்தான்.

"ஆபரேடர் ஸ்பீகிங், நம்பர் ப்ளீஸ்.."

பெண்களே அந்தப் பணியைச் செய்வார்கள். வாடிக்கையாளரின் உரையாடலை ஒட்டுக் கேட்பார்கள். அந்தரங்க உரையாடல்கள் ஆபரேடர் பெண்களால் களவாடப்படும் என்ற சந்தேகமும் பயமும் கோபமும் இருந்தே வந்தது; பிறகு வந்த 'மேக்னடோ' டெலிஃபோனும் மக்களுக்கு பேஜாராகப் போனது. அந்தகாலகாரர்களை கிளப்புவதற்கு கிராங்கை வைத்துச் சுற்றுவது மாதிரி டெலிபோனோடு இணைத்த கிராங்கை வேகமாகச் சுற்றினால், மறுமுனையிலுள்ளவரும் இதே போல சுற்றி ரிசீவர்களை எடுத்துப் பேசிக் கொள்ளலாம்.

வெகு காலத்துக்கும் இந்திய ரெயில்வே ஸ்டேஷன்களில் இவ்வித 'மேக்னடோ' தொலைப்பேசி கருவிகள் உபயோகத்திலிருந்து வந்ததை உங்களில் சிலர் பார்த்திருக்கக் கூடும். வரவேண்டிய ரயில் வண்டி அடுத்த நிலையத்திலிருந்து கிளம்பியாயிற்றா என்பதை அறிந்துகொள்ள ஸ்டேஷன் மாஸ்டர் 'மேக்னடோ' டெலிபோனின் கிராங்கைச் சுழற்றிப் பேசுவார். உரையாடல் முடிந்தபோதும் முன் மாதிரியே கிராங்கைச் சுற்றிவிட்டே வைக்கவேண்டும்.

பிறகுதான் தானியங்கி தொலைப்பேசி எக்ஸ்சேஞ்சு, டெலிபோன், டயல் என்பதெல்லாம் கண்டுபிடிக்கப்பட்டது.

டயலின் கண்டுபிடிப்பு டெலிபோன் வாடிக்கையாளர்களுக்கு மிகுந்த சுதந்திரத்தையும் நிம்மதியையும் தந்தது. இதைக் கண்டறிந்து உலகுக்கு அளித்தவர் அல்மன் ஸ்ட்ரோவ்ஜர் எனும் அமெரிக்க வர்த்தகர். இந்த புதிய ஆட்டோமேடிக் டெலிஃபோன் அமைப்புக்கு அதைக் கண்டுபிடித்தவரின் பெயரைக்கொண்டே 'ஸ்ட்ரோவ்ஜர் முறை' எனப் பெயர் வழங்கலாயிற்று.



டயல் கண்டுபிடித்தது சுவையான விஷயம். ஸ்ட்ரோவ்ஜர், அமெரிக்காவின் கான்சாஸ் நகரில் சவப்பெட்டி செய்து விற்கும் வியாபாரி. அத்தோடு சவ அடக்கத்துக்கு வேண்டிய சகலத்தையும் செய்து வந்தவர். 1880இல் அந்நகரின் முதல் தொலைப்பேசி வாடிக்கையாளரே அவர்தான். தொலைப்பேசி, மோட்டார்கார், விவாகரத்து - இம்மூன்றையும் அமெரிக்காவில் இப்படி சொல்லிக் கொள்ளுவதுண்டு: "இந்த பரந்த அமெரிக்க நாட்டில் ஒவ்வொரு ஏழு மனிதர்களுக்கும் ஒரு மோட்டார்காரும், ஒவ்வொரு ஏழு மனிதர்களுக்கும் அவர்களின் திருமணத்தில் ஒரு விவாகரத்தும் உண்டு."

ஆனால், "ஹலோ பெண்கள்" எனக் கிண்டலாக அறியப்பட்ட டெலிஃபோன் சுவிட்சுபோர்டு ஆபரேடர்களுக்கும் ஸ்ட்ரோவ்ஜருக்கும் வாய்ச்சண்டை தொடர்ந்து இருந்துகொண்டே வந்திருக்கிறது. டெலிஃபோன் ஆபரேடர் பெண்களும் சளைத்தவர்கள் அல்ல. அவரது வாய்ச் சண்டைக்குத் தகுந்த எதிர்வினையாற்றுவார்கள். எப்பொழுதெல்லாம் அவரது தொலைப்பேசிக்கு அழைப்புகள் வருகின்றதோ, அப்போதெல்லாம், தொடர்பு கிடைக்காதபடிக்கு, அவரது தொலைப்பேசி ஏற்கனவே உரையாடலில் இருக்கும்போது (Engage) கிடைக்கும் பிஸி ஒலியை (Busy Tone) அப்பெண்கள் உண்டாக்கி வைப்பார்கள்.

அதன் காரணமாகச் சவப்பெட்டி ஆர்டர்கள் மற்றும் சவ அடக்கப் பணிகள் வேண்டி அழைப்புகள் வராமல் ஸ்டோவ்ஜர் தன் தொழிலில் நஷ்டமடைந்து வந்தார். தம் மகனோடு அவர் யோசித்து ஆராய்ச்சி செய்து 1891இல் ஆட்டோமேடிக் டெலிஃபோன் எக்ஸ்சேஞ்சை டயல் சாதனத்துடன் கண்டுபிடித்தார். இந்தியா, லண்டனிலிருந்து பெற்றுக்கொண்டபோது, நாமே எண்களைச் சுழற்றி, இருப்பதில் தேவைப்பட்ட எண்ணை டயலில் சுற்றி, தொடர்புகொண்டு பேசத்தொடங்கினோம்.

நான் பணியிலிருந்த காலத்தில் (60, 70, 80களில்) எங்களுக்கு வரும் தினசரி புகார்களில் நிச்சயம் இருபதுக்கு ஒன்றாவது டயல் குறித்து இருக்கும். ஒரு எண்ணை டயல் செய்தால் தவறாக இன்னொரு எண் கிடைப்பதிலும் டயலின் பழுது சம்மந்தப்பட்டிருக்கும். ஒரு டயலைச் சுழற்றினால் அது படுவேகத்தில் போகும். இன்னொன்று அசமந்தமாய் மந்த கதியில் நகரும்.

ஒருநாள் புகார் பகுதியைக் கவனித்த சமயம் மறுமுனையில் பேசியவர் சொன்னார்: "ஐயா, நம்ம டயல சுத்தினா, அது அப்படியே நிக்கி."



"நிக்கியா?"

"ஆமாங்க, நிக்கி."

அவர் ஆலந்தூர் கடைத்தெருவில் மளிகைக் கடை வைத்திருக்கும் சங்கரலிங்க நாடார்.

தண்டபாணி லைன்மேனின் ஏரியாவுக்குள் இருப்பது பஜார் பகுதி. மாலை நான்கு மணிக்கு அந்த கம்ப்ளெயிண்டோடு புறப்பட்டுப் போன லைன்மேன் தண்டபாணி ஒரு மணி நேரங்கழித்து எக்ஸ்சேஞ்சுடன் பேசினார்.

"டயல் மாத்தணும் சார். ஸ்டோர் மூடியிருப்பாங்க பெண்டிங்கு வச்சிடுங்க. காலைல மத்திடறேன்."

அப்படியென்று ரிப்போர்ட் எழுதி அந்தப் பழுதை வைத்தேன்.

மாலை ஆறுமணிக்கு, தொலைப்பேசி இன்ஸ்பெக்டர் அல்லது ஜீனியர் எஞ்சினியர், ஒருமுறை தொடர்புகொண்டு அன்றைய தினத்தில் பழுது பார்க்கப்படாமல் மறுநாளைக்கு பார்க்க வேண்டிய புகார்களைக் கேட்டு எழுதிக்கொள்ளுவார்கள். அப்படியாக ஜே.இ. ஒருவர் பஜார் பகுதி புகார்களில் தேங்கி நிற்பனவற்றைக் கேட்டு எழுதிக்கொண்டு போனார். அவற்றில் சங்கரலிங்கம் நாடாரின் டயல் பழுதும் ஒன்று.

டயலைப் பொறுத்தளவு ஒரு சில பழுதுகள் உண்டாகும். எண்களைச் சுற்றினால் டயல் ஸ்பிரிங்கு இயங்கி எக்ஸ்சேஞ்சிலுள்ள செலக்டர்கள் எனும் சுவிட்சுகளை இயக்கம்கொள்ளச் செய்யும். படிப்படியாக அடியெடுத்து டயல் செய்த எண்ணை எட்டும். இந்த டயல் ஸ்பிரிங்கின் இறுக்கத்தன்மையைப் பொறுத்தது டயலின் சுழற்சி, இன்ன காரணத்தால் பழுது என்று கண்டறிந்த பின், லைன்மேன் அல்லது பிற டெக்னிஷியன்கள், டயல் ஸ்பிரிங்கின் டென்ஷனை கூட்டியோ குறைத்தோ பார்ப்பார். இல்லாவிடில் டயல் ஸ்பிரிங்கையோ டயலையோ புதியதாக மாற்றித் தருவார்.

ஆரம்பத்தில் முற்றிலும் உலோகத்தாலான உள்-வெளி பாகங்களைக் கொண்டிருந்த டயல் பிறகு பிளாஸ்டிக்கானது. சில லைன்மேன்கள் பழுது பார்க்கப்பட்டு நல்ல நிலையிலுள்ள ஓரிரு டயல்களைத் தம்மிடம் வைத்திருப்பார்கள். தேவைப்படும்போது வாடிக்கையாளர்களின் தொலைப்பேசி கருவிகளில் மாற்றித் தருவார்கள். இதற்காக அவர்கள் எதாவது பணம் கேட்பார்கள். அவசரம், அவசியம், தேவை கருதி வாடிக்கையாளர்களும் கேட்டதைத் தருமுன் பேரத்தில் ஈடுபடுவார்கள். போகப் போக இந்தப் பழுதை சரிபார்க்க இவ்வளவு, இந்த உபரி பாகத்தை மாற்றித் தர அவ்வளவு என்று ரேட் நிர்ணயித்துக்கொண்டு பேரம் பேசி முடித்துக் கொடுத்தார்கள்.

ஆரம்பத்தில் இத்தகைய இலாகா - இலவச சேவைகளுக்கு வாடிக்கையாளர்களே மனமுவந்து கொடுத்து வந்த 'பக்ஷீஸ்'ஐ இனாமாக பாவித்துப் பெற்றுக்கொண்டிருந்தது, போகப்போக 'கையூட்டாக' உருவான அவலத்தை வரப்போகும் பக்கங்களில் பார்க்கலாம்.

லைன்மேன் தண்டபாணி, காலையில் டாணென்று

எட்டு மணிக்கெல்லாம் தொலைப்பேசி எக்ஸ்சேஞ் சோடு தொடர்புகொண்டு, தன் பகுதியில் முன் தினம் முடிக்காமல் தேங்கிய புகார்களோடு இன்றைய புதிய புகார்களையும் கேட்டு எழுதிக்கொண்டு, சந்தோஷமாய்ப் புறப்பட்டார். அவரிடம் நல்ல நிலையிலுள்ள இரண்டு டயல்கள் இருந்தன. பஜார் தெரு நாடார் பேரமே பேசமாட்டார்.

இந்நேரம் பரங்கி மலையடிவாரத்திலுள்ள மத்தியாஸ் நகர் சேரியில் அங்கம்மா நேற்றிரவு வந்து சேர்ந்த புதுச்சரக்கு நிரம்பிய பிளாஸ்டிக் கேனுடன் தண்டபாணியை எதிர்கொள்ளுவாள். ஏழெட்டு ரூபாயில் அன்றைய காலை நேரம் சூடாகவும் தெம்பாகவும் அவனுக்கு அமைந்து, நாளெல்லாம் சைக்கிள் மிதித்து மற்ற புகார்களையும் பழுதுகளையும் கவனித்து முடிக்க ஏதுவாயிருக்கும். வீட்டுக்குப் போகும்போது எப்படியும் ஓர் இருபத்தைந்து ரூபாயாவது 'மால்' சேர்ந்திருக்கும். எல்லாம் இன்று ஆகும் 'போணி'யைப் பொறுத்தது.

சரியாகப் போணியாகவில்லையென்றால் நாள் முழுவதுமே நாசமாகிவிடும் என்ற யோசனையோடு சைக்கிளை மிதித்தான் தண்டபாணி.

"வணக்கம் நாட்டார்ரே" என்றவாறே கடை முன்னால் இறங்கிய தண்டபாணியை வியப்போடு பார்த்து விட்டு, "என்னே..?" என்றார் சங்கரலிங்கம்.

"ஸ்டோர்ஸ் தொறக்கறதுக்கு நேரமாகவிட்டது. மாத்திப்பிடலாம்", என்றார் லைன்மேன்.

"அதான் மாத்தியாச்சேப்பா, பாரு புது டயலு, எப்பிடி ஓடுது பாரு" என்றார் மளிகைக் கடைக்காரர்.

தண்டபாணியும் அதை சோதித்துப் பார்த்தார். புத்தம் புதிய ஐடிஐ டயல். ஆச்சரியம், ஏமாற்றம், எரிச்சல் கோபமெல்லாம் ஒரு சேர, "யாரு வந்து மாத்தினது?", என்று கேட்டார் லைன்மேன்.

"ஒங்க ஜே.இ. சார் வந்தாரு, ஏழுரை மணிக்கெல்லாம் வந்து மாற்றி குடுத்துட்டுப் போயிட்டாரு."

"என்ன நாடார், ஒனக்கோசரம் ஸ்டேர்ஸ்ல சொல்லி வச்சி வாங்கியாந்திருக்கேன். ஸ்டோர்காரனுக்கு இருபது ரூபா கொடுத்தேன். டயலுக்கு டிமாண்டு ஜாஸ்திங்க" என்றார் தண்டபாணி.

"அதுக்கு நா என்ன செய்யறது, வேறே ஆருக்காச்சி போட்டுக் குடுத்து காசு வாங்கின்னா. ஜே.இ. முந்திகிட்டாரு. ஒனக்கு குடுக்கறதத்ததான் அவருக்கு குடுத்தேன்". சொல்லிவிட்டு உறவைக் கெடுத்துக்கொள்ள வேண்டாமென்று ஓர் இருபத்தைந்து ரூபாயை எடுத்து தண்டபாணியின் கையில் வைத்து அமுக்கினார் கடைக்காரர்.

தொலைப்பேசி வலைதளம் என்று அன்றைய முறையச் சொன்னால், அதன் பல்வேறு அங்கங்கள் உங்களுக்குப் பரிச்சயமான அளவில்.. வெளியில் தெரியும் கம்பங்கள், அவற்றின் வழியாக வாடிக்கையாளரின் வீட்டையடையும் நீண்ட தூரம் பயணித்த கம்பிகள், வாடிக்கையாளரின் வீட்டுக்குள் இருக்கும் கருவிகள் என்பன.

வாடிக்கையாளரின் தொலைப்பேசியுடன் இணைந்த பூமிக்கடியில் செலும் கேபிள்; இணைப்பகத்தில் அமைந்த சுவிட்சுகள்; டயல்டோன், பிஸிடோன் முதலான ஒலிகளை நமக்கு உண்டாக்கித்தரும் ரிங்கர் - இவை எல்லாம இயற்கை உபாதைகளி னின்று பாதுகாக்கப்படுவது முக்கியமான காரியம். ஒவ்வொரு வாடிக்கையாளரின் தொலைப்பேசி கருவியும் அப்பகுதியிலுள்ள டெலிபோன் எக்ஸ்சேஞ்சில் பொருத்தப்பட்ட சுவிட்சுகள் - செலக்டர்கள் முதலான விலையுயர்ந்த முக்கிய இயந்திரங்களால் ஆளப்படுபவை. அதைக் கருத்தில் கொண்டே டெபாசிட், வாடகை முதலான தொகை வசூலிக்கப்படுகிறது.

"ஐயோ, இந்த டெலிபோன் ஒண்ணுக்கா இவ்வளவு வாடகை? இது எங்கள் வீட்டுக்குள்ளதானே இருக்கு?" என்று பல அன்பர்கள் கேட்டதுண்டு. செலக்டர்கள், சுவிட்சுகள், ரிங்கர் ஆகிய விலையுயர்ந்த - அதிமுக்கிய டெலிஃபோன் எக்ஸ்சேஞ்சு இயந்திரங்கள் அதீத மின்சார பாய்ச்சலால் முற்றிலும் சேதமடையக் கூடும் என்பதால் அதை தடுக்க அங்கங்கே தடைகள் அமைக்கப்பட்டிருந்தன. எக்ஸ்சேஞ்சுக்குள் அதீத மின்சக்தி தாக்கினால் இயந்திரங்களைப் பாதுகாக்க ஃப்யூஸ், ஹீட்காய்ல், கார்பன் அரெஸ்டர்கள் என்பவை ஒவ்வொரு தொலைபேசிக்குமாய் பொருத்தப்பட்டு, இவை ஒவ்வொன்றாக செயலிழந்து முக்கிய இயந்திரங்கள் சேதமடைவதைத் தடுக்கும்.

இதே விதமாய் ஒரு காலக்கட்டத்தில் வாடிக்கையாளரின் வீட்டுக்குள்ளும் தொலைப்பேசி கருவிக்கு சற்று தூரத்தில் எல்.டி. பாக்ஸ் (Lightning Device Box) என்று ஒன்றிருந்தது. இடிமின்னல் மற்றும் மிக அதிகமான மின்சாரம் திடீரென வந்து தாக்கும்போது டெலிபோன் சாதனம் செத்து விடாதிருக்கும்படி இந்த ஏற்பாடு. நான் சென்னை தொலைபேசிக்குள் காலெடுத்து வைத்த நாளிலேயே அது பெரும்பான்மையான வீடுகளில் தென்படவில்லை.

எல்.டி. பெட்டியில், சிறிய கண்ணாடி ஃப்யூஸ் காரியர் ஒன்னும் சிறிய பச்சை நிற ஹீட்காய்ல் ஒன்றும் பொருத்தப்பட்டிருக்கும். இந்த பச்சை நிற ஹீட்காய்லோ, கண்ணாடி ஃப்யூஸோ அதிகபட்ச மின்சக்தி வருங்கால் துண்டிக்கப்படும். எனவே, தொலைப்பேசி கருவி சேதமடையாது. எக்ஸ்சேஞ்சில் இருந்த ஹீட்காய்ல்கள் சற்றே அளவில் பெரியதும் சிவப்பு நிறத்திலும் கருப்பு நிறத்திலுமானவை.

நான் 60களின் ஆரம்பத்தில் இலாகாவில் அடியெடுத்து வைத்த சமயம், அனேகமாய் வாடிக்கையாளர் வீடுகளில் இருந்த எல்.டி. பெட்டிகள் அகற்றப்பட்டிருந்தன.

(தொடரும்)

**published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.**
**Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.**
**Editor : PRABHU THILAAK**

